A

ACTIVE

B

BUZZ
BOSS

C

CADET DX

D

DEVIL DX

E

ELEPHANT

F

FISH

G

GIRAFFE

H

HEN

I

INSECT

J

JOKER

K

KIDD DX

L

LI'L ANGEL
LAMBADA
LIMBO

M

MISSILE
MISS INDIA Jr

N

NEST

O

ORANGE

P

PIRANHA

Q

QUEEN Jr

R

ROBO COP

S

SPARKY

SALSA

T

TERMINATOR




V

W

The largest range of kids bikes
**HERO CYCLES**
THE ABC OF CYCLING

HTA.5979.2001



இந்தியப் பண்பாடு-வரலாறு 47



கோபமும் மௌனமும் 19



மாயாஜால மலை 11



தேவி பாகவதக் கதைகள் 51

## பொருளடக்கம்






SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandmama India Ltd.***
**to**
**Subscription Division**
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**
இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத்தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ 900
இந்தியாவிற்குள் ரூ 120
**புக்போஸ்டில்**
உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணி யார்டரிலோ சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.

நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்கரபாணி

# உரிமைக்கும் மேலாக கடமை

இன்றைக்கு ஐம்பது ஆண்டுகளுக்கு முன் ஜனநாயக முறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசாங்கம் பண்டித ஜவாஹர்லால் நேருவின் தலைமையில் முதன் முதலாக அமைந்தது என்பதை நினைவுப்படுத்திக் கொள்கிறோம். இது நமது அரசியல் நிர்ணயச்சட்டம் நிறைவேற்றப்பட்டு இரண்டு ஆண்டுகளுக்குப் பின் அமைந்தது. 1950 ஜனவரி 26ல் நாம் நம்மை ஜனநாயகக் குடியரசு எனப் பிரகடனப்படுத்திக் கொண்டோம். வயது வந்த வர்களுக்கு வாக்குரிமை என்ற அடிப்படையில் முதலாவது பொதுத் தேர்தல் நாடாளும் மன்றத்திற்கு 1951 அக்டோபரிலிருந்து 1952 பிப்ரவரி வரை நடந்தது.

அரசியல் நிர்ணயச்சட்டம் ஒவ்வொருவனும் இறையாண்மையையும் ஒருமைப்பாட்டையும் ஒரே நாடு என்பதனையும் காக்க வேண்டும் என கூறுகிறது. இது மக்களின் தலையாய கடமையாகும். அதே சட்டம் மக்களுக்கு அடிப்படை உரிமைகளையும் அளித்துள்ளது. பேச்சுரிமை, மதசுதந்திரம், எத்தொழிலையும் செய்யும் உரிமை என்பன போன்ற உரிமைகளை அளித்துள்ளது. அது இந்த உரிமைகளோடு கடமைகளையும் ஒவ்வொரு இந்தியனும் செய்ய வேண்டும் எனக் கூறியுள்ளது இதன் சிறப்பாகும். நம் உரிமைகளை விட கடமையைத்தான் முதலில் செய்ய வேண்டுமென மகாத்மா காந்திஜீ அறிவுரை கூறியுள்ளார்.

நம் நாடு இப்போது எல்லா முனைகளிலிருந்தும் நெருக்கடியை எதிர்நோக்கிக் கொண்டிருக்கிறது. இந்தப் புத்தாண்டில் நம் நாட்டிற்கு நாம் நம் கடமைகளைத் தன்னலம் கருதாமல் செய்து நாட்டின் ஒருமைப் பாட்டைக் காப்போம் என உறுதிமொழி எடுத்துக் கொள்வோம்.

ஆசிரியர் : **விஸ்வம்**





இந்திய மாவீரர்கள் புதிர்ப் போட்டியில் கலந்து கொண்டு அற்புதமான பரிசுகளை வெல்லுங்கள்

# இந்திய மாவீரர்கள் – 4

தற்கால இந்தியாவில் மாவீரர்களும் இருக்கிறார்கள் இவர்கள் பல்வேறு துறைகளைச் சார்ந்தவர்கள். அவர்கள் பற்றிய வினாக்கள் இதோ!

முற்றிலும் சரியான விடைகள் கொண்ட மூன்று கூப்பன்களுக்கு சைக்கிள்கள் பரிசளிக்கப்படும்*

1 இலக்கியத்தில் நோபல் பரிசைப் பெற்ற முதலாவது ஆசியர் இவர். இவரது பாடல்கள் பலரை இந்திய சுதந்திரப் போரில் பங்கு கொள்ளச் செய்தன. இவர் யார்?

---

2 இந்திய அணுகுண்டு சோதனை போக்ரானில் நடந்தது என்றதும் முதலில் நீங்கள் யார் பெயரை நினைக்கிறீர்கள்? பாரத ரத்னப் பட்டத்தைப் பெற்ற இவர் ராணுவ நுணுக்க ஆராய்ச்சிக்குப் பெயர் பெற்றவர். இவர் யார்?

---

3 இந்த நோபல் பரிசு பெற்றவர் நினைவாக ஒவ்வொரு ஆண்டிலும் பிப்ரவரி 28ஐ தேசிய விஞ்ஞான நாளாகக் கொண்டாடுகிறோம். இயல்பியலில் இவர் 1928ல் இப்பரிசைப் பெற்றார். இவர் யார்?

---

4 இங்கிலாந்து ராணி இந்த சிதார்வாத்தியக் கலைஞருக்கு கௌரவப் பட்டம் கொடுத்தார். இந்தக் கலைஞர் யார்?

---

5 கோல்கத்தாவில் லட்சக்கணக்கான ரசிகர்கள் இவருக்கு ஆலயத்தையே கட்டி இருக்கிறார்கள். தற்போது இவர் மிகவும் பெயர் பெற்ற தொலைக்காட்சிப் போட்டியை நடத்தி வருகிறார். இவர் யார்?

---



ஒவ்வொரு வினாவிற்கும் அதன் கீழுள்ள வெற்றிடத்தில் விடையைத் தெளிவாக எழுதவும். இந்த ஐந்து மாவீரர்களில் யாரை நீங்கள் விரும்புகிறீர்கள். அதற்கு என்ன காரணம் என்பதை பத்து சொற்களில் எழுதவும். எனக்கு மிகவும் பிடித்த தற்கால மாவீரர் ....................................

.....................................................................

போட்டியாளரின் பெயர்: ....................................

வயது: .................. வகுப்பு: ..................................

முகவரி: ..........................................................

.....................................................................

பின்கோடு: ......................... போன்: ...........................

போட்டியாளரின் கையொப்பம்: ...................................

பெற்றோரின் கையொப்பம்: ........................................

இந்தப் பக்கத்தைக் கத்தரித்துக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்

**இந்திய மாவீரர்கள் புதிர்ப்போட்டி-4**
**சந்தமாமா இந்தியா லிமிடெட்**
நெ. 82. டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை-600 097
அனுப்ப வேண்டிய கடைசித் தேதி பிப்ரவரி 5, 2002

**நிபந்தனைகள்:**

1. இப்போட்டி 8 முதல் 14 வயதிற்குட்பட்ட சிறார்களுக்கு மட்டுமே.
2. *எல்லா மொழிப்பதிப்புகளின் கூப்பன்களிலிருந்தும் மூன்று பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இச்சிறார் களுக்கு அவர்களுக்கு ஏற்ற அளவு சைக்கிள்கள் வழங்கப் படும். முற்றிலும் சரியான விடைகள் கொண்ட பல கூப்பன் கள் இருந்தால், 'எனக்கு மிகவும் பிடித்தமான மாவீரர்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட வாக்கியங்களில் சிறந்தனவாகத் தேர்ந்தெடுக்கப்படுபவைகளுக்குப் பரிசு அளிக்கப்படும்.
3. நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.
4. இப்போட்டி தொடர்பாக எவ்விதக்கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது.
5. வெற்றிபெற்றவர்களுக்குத் தபால் வாயிலாக முடிவுகள் தெரிவிக்கப்படும்.

இப்பரிசுகளை உங்களுக்கு அளிப்பவர்கள்





# பொறுப்பை உணர்!

மேலையூர் ஏரிக்கரையில் சிலர் குடிசைகளைப் போட்டுக் கொண்டு தம் குடும்பத்தோடு வாழ்ந்து வந்தனர். அவர்களில் ஒருவன் தான் குட்டடப்பன். அவன் தன் மனைவி பூவாயியுடனும் இருமகன்களுடனும் இருந்தான். ஆனால் ஒரு வேலையும் செய்யாமல் முழுச் சோம்பேறியாக இருக்கவே, பூவாயியின் தலை மீது தான் குடும்பபாரம் விழுந்தது. அவள் இரண்டு மூன்று வீடுகளில் வேலை செய்து பணம் சம்பாதித்து வாழ்க்கையை நடத்தி வந்தாள்.

குட்டடப்பனோ தனக்கு எங்கிருந்தோ லட்சலட்சமாகப் பணம் வரும் என்று பகல் கனவு கண்டு கொண்டிருந்தான். பூவாயியோ தினமும் அவனிடம் ஏதாவது வேலை செய்து பணம் சம்பாதித்து வந்து குடும்பத்தை கவனிக்கும்படி சொல்லிக்கொண்டே இருந்தாள். ஆனால் குட்டடப்பன் அதை லட்சியம் செய்யாமல் தன் போக்கிலேயே இருந்து வந்தான்.

ஒரு நாள் அவன் தன் வீட்டு வாசலில் கட்டிலில் படுத்திருக்கையில் வீட்டின் முன்னால் ஒரு ஒல்லியான பெண் நாய் சென்று கொண்டிருப்பதைக் கண்டான். அதன் பின்னால் மூன்று குட்டிகள் போய் கொண்டிருப்பதையும் அவை அந்த ஒல்லி நாயிடம் பால் குடிக்க முயல்வதையும் அவன் கவனித்தான். தாய் நாயோ அவற்றிற்கு பால் கொடுக்க முடியாமல் தவித்து சோர்ந்து படுத்தது. நாய் குட்டிகளும் தாய்ப்பால் கிடைக்காமல் முக்கி முனகிக் கொண்டிருந்தன.

சற்று நேரமானதும் தாய் நாய் மெதுவாக எழுந்து குட்டடப்பனின் குடிசைக்குள் சென்றது. அங்கு அடுப்பினருகே இறக்கி வைக்கப்பட்டிருந்த சோற்றுப் பானையை அது பார்த்து

வெ. லாவண்யா

தன் வாயை அதனுள் விட்டது. அதே சமயம் அங்கு வந்த பூவாயி அதை நன்கு அடித்து வெளியில் துரத்தினாள். வாசலில் படுத்திருந்த கணவனைப் பார்த்து அவள் ''வீட்டிற்குள் நுழைந்த நாயை உங்களால் விரட்டக் கூட முடியவில்லையா? நாய் ஒரு பானை சோற்றில் வாயை வைத்து வீணாக்கி விட்டதே. அதை யாரும் சாப்பிட முடியாது. எல்லோரும் பட்டினி தான்'' என்று கூறியவாறே சோற்றுப்பானையை எடுத்துக் கொண்டு வெளியே வந்து அதிலிருந்த சோற்றை தெருவில் ஒரு ஓரமாகக் கொட்டினாள்.

தெருவில் கொட்டப்பட்ட சோற்றைத் தின்ன பெண் நாய் ஓடி வந்தது. அது அவ்வளவு சோற்றையும் தின்று விட்டுத் தெம்புடன் போய்த் தன் குட்டிகளுக்குப்பால் கொடுக்கலாயிற்று. மறுநாள் அதே பெண் நாய் அதே சாப்பாட்டு வேளைக்குக் குட்டப்பனின் குடிசைக்கு வந்து உள்ளே நுழைய முயன்றது. அன்று பூவாயி அதைப் பார்த்து விட்டதால் ஒரு கல்லை எடுத்து அதை அடிக்கவே அது ஊளை இட்டுக் கொண்டே ஓடிவிட்டது. அதைப்பார்த்து கட்டிலில் படுத்திருந்த குட்டப்பன் நிமிர்ந்து உட்கார்ந்து ''அந்தப் பாழாய்ப்போன நாய் இன்றும் வந்து விட்டதா? நேற்று உன்னிடம் அடி வாங்கியும் அதற்கு உறைக்கவில்லையா?'' என்று பூவாயிடம் கேட்டான்.

பூவாயி அவனை வெறித்துப் பார்த்து ''நாய்க்குக் கூட கஷ்டப்பட்டாவது தன் குட்டிகளை வளர்க்க வேண்டும் என்ற அக்கறை இருக்கிறது. ஆனால் நீங்கள் சாப்பிட்டு விட்டு எதற்கும் கவலைப்படாமல் எந்த வேலையும் செய்யாமல் படுத்தே கிடக்கிறீர்கள். தன் குட்டிகளின் பசியைத் தீர்க்க தாய் நாய் எவ்வளவு கஷ்டப்படுகிறது என்று பார்த்தீர்களா? அந்த நாயின் பொறுப்பு போல உங்களுக்கு இல்லையே!'' என்று இடித்துக்கூறினாள்.

அதைக் கேட்ட குட்டப்பனின் மனதில் பெருத்த மாறுதல் ஏற்பட்டது. அவன் எழுந்து ''நான் இப்போதே போய் ஏதாவது வேலை செய்து பணம் சம்பாதிக்கிறேன்'' எனக் கூறிச் சென்றான்.



# எதிலும் பேரம் தான்!

முத்தைய்யா பல வியாபாரங்களைச் செய்பவன். எந்தப் பொருளை வாங்கி னாலோ அல்லது விற்றாலோ பேரமே பேசுவான். எதற்கும் பேரம் பேசுவது அவனது வழக்கமாகிவிட்டது. ஒரு முறை பொழுதைப் போக்க மீன் பிடிக்கலாம் என்று எண்ணி ஒரு வலையுடன் ஒரு படகைச் செலுத்திக் கொண்டு ஆற்றில் போய்க் கொண்டிருந்தான்.

அவன் மீன் பிடிக்க ஆற்றில் வலையை வீசி இழுத்த போது அதில் அதிசய மான மீன் சிக்கி இருந்ததைப் பார்த்தான். அதன் உடல் பல வண்ணங்களில் மின்னிக் கொண்டிருந்தது. ஆச்சரியப்பட்டு அவன் அதைப் பார்த்த போது அந்த மீன் ''என்ன அப்படிப் பார்க்கிறாய்? நான் உனக்கு மூன்று வரங்கள் கொடுக்கி றேன். அவற்றைக் கேட்டு பெற்றுக் கொண்டு என்னை ஆற்றில் போட்டு விடு'' என்றது.

முத்தைய்யாவும் ''மூன்று வரங்கள் தானா? ஆறு வரங்கள் கொடு'' என் றான். மீன் தேவதையும் ''முடியாது. மூன்றே வரங்கள் தான் கொடுக்க முடியும்.'' என்றது. முத்தையாவும் ''சரி ஐந்து வரங்களாவது கொடு'' எனவே தேவதையும் ''முடியாது. மூன்றே வரங்கள் தான். அவற்றையும் சட்டென்று கேட்டு என்னை நீரில் விட்டு விடு. இல்லா விட்டால் நான் துடிதுடித்து இறந்து விடுவேன்'' என்றது.

முத்தையாவும் ''சரி உனக்கும் வேண்டாம். எனக்கும் வேண்டாம். நான்கு வரங்களைக் கொடு. அது போதும்'' என்று கூறியவாறே மீனைப் பார்த்தான்.

அப்போது அந்த மீன் துடிதுடித்து இறந்தே போயிற்று!



ORISSA
The soul of India

## உங்களுக்கான புதிர் வினாக்கள்

# கட்டக்

ஆயிரம் ஆண்டு பழமையான நகருக்கு வாருங்கள்! இதைக் கண்டதும் புல்லரிக்கிறதா? ஆம், இது கட்டக் தான் ஒரிஸ்ஸாவில் உள்ளது. சுற்றுலாப் பயணிகளையும், கடை வியாபாரிகளையும், வாடிக்கையாளர்களையும், பொழுது போக்க வருவோரையும் திருப்திப்படுத்தும் ஆயிரம் வருடத்திற்கும் மேலாக இருந்து வரும் நகரம் இது.

முன்பு கட்டக்கின் பெயர் கடக என்றிருந்தது. இது ஒரிஸ்ஸாவின் மிக முக்கிய நகரம். இதை வரலாற்றுச் சிறப்பு மிக்க பல வம்சத்தவர் ஆண்டனர். கங்க வம்சத்தவர் கட்டிய பாரபாதிக் கோட்டை சிதிலமாகி இருப்பதை இன்றும் காணலாம்.

புனிதயாத்திரை மேற்கொண்டீர்களா? இங்கு பல பகவான்களின் ஆலயங்கள் உள்ளன. கதம்-ஈ-ரசூல் என்பது இந்துக்களும் முஸ்லிம்களும் வணங்கும் இடமாகும். இங்கு நபிகள் நாயகத்தின் காலடிச் சுவடுகள் வட்டவடிவக்கல்லில் பதிந்திருப்பதாகக் கருதி அதற்கு மரியாதை செலுத்துகிறார்கள்.

இங்கு அன்சுபா ஏரி அழகாக உள்ளது. குளிர்காலத்தில் பல நாட்டுப்பறவைகள் இங்கு வருகின்றன. மலை ஏறி மகிழ்பவர்களுக்கு அசோகாஜ்ஹா மிகவும் பிடிக்கும். மகாநதியின் நடுவே உள்ள தவளேஸ்வர் என்ற தீவு பார்க்க அழகானது. பொழுதுபோக்கிற்கான இடமும் கூட.

கட்டக் அதன் ஃபிலிகிரிக்கும் வெள்ளி ஆபரணங்களுக்கும் பெயர் பெற்றது. பித்தளை சாமான்களுக்கும், பட்டு, நூல் துணிகளுக்கும் இது புகழ் பெற்றது.

---

**உங்களுக்கான புதிர் வினாக்கள் (14 வயதிற்குட்பட்டவர்களுக்கு மட்டும்)**

## போட்டி—V

1. புரியிலுள்ள ரகுராஜ்புர் ஒரு வகை வண்ண ஓவியங்களுக்குப் பெயர் பெற்றது. அது எந்த வகை?

   ------------------------------------------

2. எஃகு ஆலைக்கு ஒரிஸ்ஸாவின் பெயர் பெற்ற நகரம் எது?

   ------------------------------------------

3. உஷக்கோடி வனவிலங்கு சரணாலயம் ஒரிஸ்ஸாவில் எங்கே உள்ளது?

   ------------------------------------------

உங்கள் விடைகளைத் தெளிவாக அவற்றிற்காக விடப்பட்ட இடங்களில் எழுதி இந்தக் கூப்பனைக் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பவும்

**Orissa Tourism Quiz Contest**
**Chandamama India Limited**
**No.82, Defence Officers Colony**
**Ekkatuthangal, Chennai - 600 097**

பெயர் : ........................................
வயது : ........................................
முகவரி : ........................................
........................................
பின்கோடு.................. போன் ..........




Winners picked by Orissa Tourism in each contest will be eligible for **3 days, 2-night** stay at any of the **OTDC Panthanivas**, upto a maximum of four members of a family. Only original forms will be entertained. The competition is not open to CIL and Orissa Tourism family members. Orissa Tourism, Paryatan Bhaven, Bhubaneswar-751 014. Ph: (0674)432177, Fax:(0674)430887, e-mail:ortour@sancharnet.in. Website:Orissa-tourism.com




# மாயாஜால மலை

## 12

(ஜீவதத்தனும் கஜவர்மனும் வீரபுர சேனாதிபதியையும் அவனது வீரர்களையும் தந்திரமாகக் கரடியப்பரின் சுரங்க உறைவிடத்தில் புக வைத்துத்தம்மிடம் சரணடையச் செய்தார்கள். சமரபாகுவுடன் அவர்களிருவரும் மலைக் கோட்டைக்குச் சென்றதும் அங்கு வீரபுரக் கிழ முதலமைச்சர் அவர்களைக் கண்டு வீரபுரமன்னர் சமரபாகுவை அப்பகுதியின் சுதந்திர மன்னனாக அங்கீகரித்திருப்பதாகக் கூறினார். பின்னர் ஜீவதத்தனையும் கஜவர்மனையும் நதிக்கரை ஓரமாக அழைத்துச் சென்றார். அப்போது-)

வயோதிக முதலமைச்சர் ஜீவதத்தனையும் கஜவர்மனையும் நதிக் கரைக்கு அழைத்துக் கொண்டு போய் ஓரிடத்தில் நின்றதும் நதியில் தேர் வடிவிலிருந்த ஒரு படகு அவர்களை நோக்கி வந்து கரை ஓரத்தில் நின்றது. அப்படகைக் கூர்ந்து பார்த்து விட்டு ஜீவதத்தன் கிழ முதலமைச்சரிடம் ''பெரியவரே! யாரோ ஒரு யட்சன் வாயிலாக எங்களைப்பற்றி அறிந்து கொண்டதாகச் சொன்னார்களே, அந்த யட்சனை இந்தப் படகில் கண்டு தான் பேசினீர்களா?'' என்று கேட்டான்.

அவரும் ''இளைஞர்களே! நான் சொல்லப் போவதைச் சற்றுப் பொறுமையுடன் கேளுங்கள். நேற்றிரவு ஒரு யட்சன் ஆகாய மார்க்கமாய்த் தன் ரதத்தில் வந்து வீரபுர மன்னனின் அரண்மனை மேல்தளத்தில் இறங்கினான். அப்போது எங்கள் இளவரசி வசந்தகுமாரி தன் தோழிகளுடன் இருந்தாள். அந்த யட்சன் திடீரெனப் பாய்ந்து இளவரசியைத்தாக்கித்தன் ரதத்தில் வைத்துக் கொண்டு ஆகாய வழியே போய் விட்டான். போகும் போது ஒரு ஓலைத்துண்டைப் போட்டான். அதைப் பார்த்தபின் அந்தப்



போக்கிரி பதுமசேன மன்னரின் மகள் பத்மாவதியையும் இதே மாதிரித் தான் கவர்ந்து சென்றான் என்று தெரிகிறது'' எனக் கூறினார்.

ஜீவதத்தனும் கோபமாக ''அந்த யட்சன் எங்களைக் காட்டில் கண்ட போது தான் பத்மாவதியை மணந்து கொண்டுவிட்டதாக ஒரு பொய்யைக் கூறினான்'' என்றான்.

கிழ அமைச்சரும், ''அப்படியா! அந்த ஓலையில் நீங்கள் விந்திய மலையில் ஏதோ ஓரிடத்திலுள்ள ஒரு கல் தேரை நகர்த்தப்போவதாக வேறு இருந்தது. அப்படிச் செய்யப் போகி றீர்களா?'' என்று கேட்டார். அப் போது கஜவர்மன் ''முதலில் அந்த யட் சனைச் சித்திரவதை செய்து அரச குமாரிகளான பத்மாவதியையும், வசந்தகுமாரியையும் மீட்க வேண்டும்'' என்றான் ஆத்திரத்துடன்.

இச்சமயத்தில் யட்சன் போன்ற ஒருவன் படகிலிருந்து இறங்கி வந்து அவர்களை அணுகினான். அவர்களை ஏற இறங்கப் பார்த்தவாறே, ''விந்திய மலைப் பகுதியிலுள்ள கல் தேரை நகர்த்தப் போகும் வீரர்கள் உங்களில் யார்?'' என்று கேட்டான்.

ஜீவதத்தனும், கஜவர்மனும் ''நீ யார்? எதற்காக கேட்கிறாய்?'' என்று எதிர்க்கேள்வி கேட்டார்கள். அப் போது அவன் ''என்னை யாரென்று கேட்கிறீர்களா? நான் யட்சத் தலைவர் மணிரஞ்சனின் பிரதிநிதி மணிபூஷ ணன். எம் தலைவர் பத்மாவதியை யும், வசந்தகுமாரியையும் மணக்கப் போகிறார். அதை நீங்கள் காண வேண்டுமென்று உங்களை அவர் அழைத்து வரச் சொன்னார்'' என்றான்.

ஜீவதத்தனும், கஜவர்மனும், ''சரி, நாங்கள் வருகிறோம்'' எனக்கூறி, கிழ முதலமைச்சரிடம் விடைபெற்றுக் கொண்டு யட்சனின் படகில் ஏறி னார்கள். அப்போது மணிபூஷணன் ''எங்கள் தலைவர் மந்திர தந்திரங்க ளில் கை தேர்ந்தவர். அவரை உங்க ளால் எதுவும் செய்ய முடியாது'' என்று அவர்களைப் பார்த்துக் கூறி கேலியாகச் சிரித்தான்.

ஜீவதத்தனும் சிரித்தவாறே தன் மந்திரத் தடியால் மணிபூஷணின் தலை மீது ஒரு தட்டு தட்டினான். மணிபூஷணன் 'ஆ' வென அலறிய

வாறே ''ஐயோ! உனக்கு இவ்வளவு மந்திரசக்தி உள்ளதா?'' என்று நடு நடுங்கிய குரலில் கேட்டான். அதற்கு ஜீவதத்தன் எதுவும் பதில் கூறாமல் இன்னொரு தட்டு தட்டவே, மணி பூஷணன் துடிதுடித்தவாறே கீழே விழுந்தான். சற்று நேரத்திற்கு பின் அவன் மெதுவாக எழுந்து ''நீயும், தலைவரைப் போலவே மந்திரசக்தி கொண்டிருக்கிறாய். அதனால் நீ என் தலைவரை ஏன் விரோதித்துக் கொள்ள வேண்டும்? அவருடன் நட்பு கொள்ளலாமே!'' என்றான்.

அப்போது கஜவர்மன் ''ஏய் தொடைநடுங்கி! பேசாமல் படகை ஓட்டு. உன் தலைவனுள்ள மாயா ஜாலமலைக்கு எங்களை அழைத்துப் போ'' என்று அதட்டினான்.

மணிபூஷணனும் ''இளைஞர் களே! என் தலைவர் எனக்கிட்ட கட்டளையைத் தான் நிறைவேற்றுகி றேன். நான் வேறு எந்த விஷயத்திலும் சம்பந்தப்படவில்லை'' என மெல் லிய குரலில் கூறினான்.

படகு நதியில் செல்லத் தொடங் கவே கரையில் நின்ற கிழ அமைச்சர் தம் கையை உயர்த்தி ஆசி கூறி ''வெற்றியுடன் திரும்பி வாருங்கள்'' என்று சொல்லி விட்டு அங்கிருந்து சென்றார். படகு தொடர்ந்து செல்கை யில் ஜீவதத்தன் ''இந்தப் படகு ஆகாயத்திலும் பறந்து செல்லுமா? இதில் போய்த்தான் உன் மணிரஞ்சன் அரசகுமாரிகளை அபகரித்துச் சென்றானா?'' எனக் கேட்டான்.



மணிபூஷணனும் ''இல்லை. அது வேறொன்று. பார்க்க இது போலத்தாக் இருக்கும்'' என்றான். அப்போது சற்றுத் தொலைவில் கண்ட மலைப் பகுதியைப் பார்த்த ஜீவதத்தன் ''அது தான் விந்திய மலையா?'' என்று கேட்டான்.

யட்சன் ஆமெனத் தலையை ஆட்டினான். அப்போது சூரியன் மேற்கு திக்கில் மறைந்து கொண்டி ருந்தான். அப்போது ஜீவதத்தன் ''கஜா! இன்றிரவுப் பொழுதை இங்கே கரையோரத்தில் தங்கிக் கழிப்போம். நாம் சாப்பிட இந்தக் காட்டில் ஏதா வது மான் கிடைக்கும். வேட்டை யாடி நான் கொண்டு வருகிறேன்'' என்று கூறிவிட்டு மணிபூஷணனிடம் ''படகைக் கரையோரத்தில் கொண்டு

போய் நிறுத்து'' என்றான். மணி பூஷணனோ ''எம் தலைவர் உங்களை நேராகத் தம்மிடம் கொண்டு வரும் படிக் கட்டளை இட்டிருக்கிறார். அதனால் நான் படகை இங்கே நிறுத்த மாட்டேன்'' என்றான்.

ஜீவதத்தனோ ''உன் தலைவன் கட்டளையைக் குப்பையில் போடு. இப்போது நீ படகைக் கரைக்குக் கொண்டு போகப் போகிறாயா அல் லது இல்லையா?'' என்று மிரட்டிய வாறே தன் மந்திரத்தடியை உயர்த்தினான்.

மணிபூஷணன் பயந்து போய் ''ஐயோ! அதால் அடிக்காதீர்கள். நீங்கள் சொல்கிறபடியே கரையோர மாகக் கொண்டு போய் நிறுத்துகி றேன்'' என்றான். படகும் கரையோரத் திற்குப் போய் நின்றது. ஜீவதத்தன் படகிலிருந்து கரையில் இறங்கி ''கஜா! நான் இங்குள்ள காட்டிற்குள் போய் ஏதாவது ஒரு மிருகத்தைக் கொன்று எடுத்து வருகிறேன். அதற் குள் நீ உலர்ந்த மரக்கட்டைகளை எடுத்துவை. அவற்றை எரித்து அந்தத் தீயில் நான் கொண்டு வரும் மிருகத்தின் மாமிசத்தை வாட்டி சாப்பிடலாம்'' என்றான்.

அதைக் கேட்ட யட்சன் ''இந்தக் காடுகளில் பயங்கர ராட்சஸர்கள் இருக்கிறார்கள். காட்டிற்குள் போவது ஆபத்து'' என்றான். அது கேட்டு ஜீவ தத்தன் சிரித்து, ''ராட்சஸனை விடக் கொடியவனான உன் தலைவனையே சந்திக்கச் சென்று கொண்டிருக்கி றேனே. அதனால் எந்த ராட்சஸனை யும் எதிர்க்கும் சக்தி எனக்கு உள்ளது என்பதை நீ புரிந்து கொள்'' என்றான்.

காட்டிற்குள் சென்ற ஜீவதத்தன் கால்மணி நேரத்துள் ஒரு மானைக் கண்டு அதனைக் கொன்று எடுத்து வந் தான். அவனைக் கண்டதும் கஜவர் மன் தான் பொறுக்கி எடுத்து வந்த கட்டைகளைக் குவித்து நெருப்பு



மூட்டினான். ஜீவதத்தன் மானை வெட்டி மாமிசத்தை எடுத்து அந்தத் தீயில் வாட்டலானான். வாட்டப் படும் மாமிசத்தின் வாசனை பரவி யது. அப்போது பயங்கர உருவம் கொண்ட ராட்சஸி ஒருத்தி ''ஆ! மாமிச வாசனை!'' கூடவே மனித மாமிச வாசனை! என்று கூவியவாறே ஓடி வந்தாள். அவளைக் கண்ட ஜீவ தத்தன் ''நீ உண்மையிலே ராட்சஸி தானா அல்லது யட்சனா?'' என்று கேட்டான்.



அதைக் கேட்ட ராட்சஸி ''அடே! என்னைப் பார்த்தால் எல்லோருமே நடுநடுங்குவார்களே. நீ பயமில்லா மல் என்னிடம் கேள்வியா கேட்கி றாய்?'' என்று சீறினாள்.

ஜீவதத்தன் சற்றும் பயப்படாமல் தன் மந்திரத்தடியால் அவள் தலை மீது ஒரு அடி அடிக்கவே அவள் 'ஐயோ வலிக்கிறதே' என்று அலறினாள்.

ஜீவதத்தனும் ''இப்போது தெரிந் ததா நான் சாதாரண மனிதன் இல்லை என்று?'' எனவே அவள் ''நீங்கள் மனிதர்கள் இல்லை தான். ஒரு வேளை யட்சர்களோ?'' என்று கேட்டாள்.

ஜீவதத்தன் பதில் கூறாதிருக்கவே, அவள் ''நீ தானே என் இரு மகன் களையும் மாயாஜாலமலைக்கு அழைத்துச் சென்றவன்? நான் வய தானவள். அந்த மலையைக் கல்லால் அடித்து நவரத்தினங்களை உதிர்க்கச் செய்யும் சக்தி எனக்கு இல்லை தான்'' என்றாள்.

ஜீவதத்தன் அவளுக்கு ஆறுதல் கூறி ''உன்னை நான் கொல்ல மாட் டேன். மாயாஜால மலை பற்றி உனக் குப் பல விஷயங்கள் தெரியும் போலி ருக்கிறது. நாங்கள் இருவரும் அங்கே போகப் போகிறோம். அதோ அந்தப் படகிலுள்ள யட்சன் எங்களை அழைத்துக் கொண்டு போகப் போகி றான். மாயாஜாலமலை பற்றி இப் போது இங்கே கூறாதே. உன் குகைக்கு என்னை அழைத்துப் போ'' என்றான்.

ராட்சஸியும் அவனைத் தன் குகைக்கு அழைத்துச் சென்றாள். அங்கு தன் கணவனான ராட்சஸனி டம் ஜீவதத்தனின் சக்தியைப் பற்றிக் கூறி ''இவனும் இவனது நண்பனும் மாயாஜால மலைக்குப் போக வழி காட்டும்படி ஒரு யட்சனைச் சிறைப்



என்றான். ஜீவதத்தனும் ''அவன் அட்டூழியங்கள் புரிபவன் தான். எங்கள் இரு அரசகுமாரிகளை அவன் கடத்திக் கொண்டு போயிருக்கிறான். அது பற்றி நான் பார்த்துக் கொள் கிறேன். அங்கே ஏதாவது கல் ரதம் இருக்கி றதா?'' என்று கேட்டான்.

ராட்சஸனும் ''ஆமாம் இருக்கிறது அது தானே மலையிலிருந்து வெளி வந்து மலையோடு ஒட்டி இருப்ப தாகக் கேள்விப் பட்டேன்'' என்றான்.

ஜீவதத்தனும் ''சரி. நான் அங்கே போய் ஆக வேண்டியதை கவனிக்கி றேன். ராட்சஸியை என்னுடன் அனுப்பு. உங்கள் இருவருக்கும் ருசி பார்க்கக் கொஞ்சம் மானின் மாமி சத்தைக் கொடுத்து அனுப்புகிறேன்'' என்றான்.

பிடித்து வந்திருக்கிறார்கள்'' என்றாள். ராட்சஸன் ஆச்சரியப்பட்டு ஜீவ தத்தனைப் பார்த்து '' நீ உண்மை யிலேயே மாயாஜால மலைக்குப் போகப் போகிறாயா?'' என்று கேட்டான். ஜீவதத்தனும் ''ஆமாம். யட்சர்கள் உன் இரு மகன்களையும் பிடித்துக் கொண்டு போய் விட்டதாக உன் மனைவி சொன்னாளே. உனக்கு அவர்களது மாயாஜால மலை பற்றிய விவரங்கள் தெரியுமா?'' என்று கேட்டான்.

ராட்சஸனும் ''அப்பகுதி மணி ரஞ்சன் என்பவனின் ஆதிகத்தில் உள் ளது. அவனை யட்சர்களின் மன்னன் தன் பிரதிநிதியாக நியமித்தான். அதனால் அவன் துணிந்து அக்கிரமங் களைச் செய்து கொண்டிருக்கிறான்''

ராட்சஸனும் தன் மனைவியை ஜீவதத்தனுடன் அனுப்பினான். இரு வரும் ஆற்றின் கரைக்கு வரவே அவர் களைக் கண்ட யட்சன் கஜவர்மனிடம் ''என்ன இது? உன் நண்பன் ஒரு ராட்சஸியுடன் வருகிறானே'' என்று கேட்டான்.

கஜவர்மனும் ''ஒரு வேளை உன்னை அவளுக்கு ஆகாரமாகக் கொடுப்பதாக அவன் அவளிடம் சொல்லி அழைத்து வந்திருக்கலாம். எதற்கும் அவனைக் கேட்டுச் சொல்கி றேன்'' என்றான் சிரித்துக் கொண்டே.

அது கேட்டு மணிபூஷணன் ''இது அநியாயம். நான் என்ன குற்றம் புரிந் தேன்? என் தலைவனின் கட்டளைப் படித்தானே நடந்தேன்'' என்றான்.

அவன் பயந்து போய் விட்டான். அங்கே வந்து விட்ட ஜீவதத்தன் மணிபூஷணனைப் பார்த்து ''இந்த ராட்சஸியைப் பார்த்தே பயந்து விட்டாயே. நான் மாயாஜாலமலைப் பகுதிக்குப் போனதும் எனக்கு உதவ ஒரு பெரிய ராட்சஸப்படையே அங்கு வரப்போகிறதே. அப்போது நீ என்ன செய்வாயோ?'' என்று கேட்டான்.

மணிபூஷணனும் ''ராட்சஸப் படையா வரப் போகிறது? ஐயோ! நாங்கள் எங்கே ஓடிப்போவது?'' என்று நடுநடுங்கும் குரலில் கேட்டான். ஜீவதத்தனும் ''ஆமாம், ராட்சஸப்படை தான். புரிந்ததா?'' என்று கேட்டான். பிறகு அவன் ராட்சஸியிடம் ''இந்தா மான் மாமிசம். எடுத்துக் கொண்டு போ. அந்த உக்கிர நேத்திரனிடம் ராட்சஸப்படையுடன் தயாராக இருக்கச் சொல்'' என்று கண் சிமிட்டியவாறே கூறினான்.

ராட்சஸியும் சொல்வதாகக் கூறி விட்டு மாமிசத்தை வாங்கிக் கொண்டு அங்கிருந்து சென்றாள். அதன் பின் ஜீவதத்தனும், கஜவர்மனும் மணிபூஷணனும் வாட்டிய மானின் மாமிசத்தை உண்டார்கள். யட்சன் அவர்களிருவரிடமிருந்து சற்று தள்ளிப் போய் உட்கார்ந்து கொண்டான்.

அப்போது ஜீவதத்தன் கஜவர்மனிடம் ''யட்சன் மெதுவாக நழுவப் பார்க்கிறான். அவன் மீது ஒரு கண்ணை வைத்திரு'' என்றான். கஜவர்மனும் ''அவன் நம்மிடமிருந்து சற்று தூரம் தள்ளிப் போய் உட்கார்ந்த போதே நானும் இப்படித் தான் நினைத்தேன். எச்சரிக்கை யாகவே இருக்கிறேன்'' என்றான்.

நள்ளிரவில் அங்கு கரடியும் சில ஓநாய்களும் வந்தன. அவை மானைச் சுட்ட இடத்தைச் சுற்றிச்சுற்றி வந்தன. எதுவும் கிடைக்காமல் போகவே அவை மணிபூஷணனின் மீது பாய வந்தன.

அதைக் கண்ட கஜவர்மன் அவற்றின் மீது ஒரு கல்லை விட்டெறிந்தான். அந்த சத்தம் கேட்டு தூங்கிக் கொண்டிருந்த மணிபூஷணன் அலறிப் புடைத்துக் கொண்டு ''ஐயோ! ராட்சஸர்கள் வந்து விட்டார்கள்'' என்று உரக்கக் கூவினான்.

(தொடரும்)



# உயர் அந்தஸ்து!

வீரராயபுர ஜமீன்தாரரின் நம்பகமான நிர்வாக அதிகாரி அரங்கநாதன் திடீரென மாரடைப்பால் இறந்து விடவே, ஜமீன்தாரருக்கு அப்பதவிக்கு யாரை நியமிப்பது என்ற பிரச்சனை ஏற்பட்டது. வரிவசூலிப்பதும் விவசாயிகளை அரவணைத்துக் கொண்டும் கண்டிப்புடன் யாவரிடமும் நடந்தும் கொண்டவர் அரங்கநாதர். அவரைப் போன்ற ஒருவரைத்தான் நியமிக்க ஜமீன்தாரர் விரும்பினார்.

இந்நிலையில் ஒரு நாள் ஜமீன்தாரரைக் காண அந்நாட்டு ராணியின் சமையல்காரி காமாட்சியம்மா வந்தாள். அவள் ஜமீன்தாரரை வணங்கி ''பிரபுவே! தங்களது ஜமீனில் நிர்வாக அதிகாரி வேலை காலியாக இருப்பதாகவும் அதன் தொடர்பாகத் தங்களைப் பார்க்கச் சொல்லியும் மகாராணியார் என்னை அனுப்பியுள்ளார். அந்த வேலையை என் மகன் ஸ்ரீதரனுக்குக் கொடுக்கும்படி வேண்டிக்கொள்கிறேன்'' என்றாள்.

ஜமீன்தாரரும் ''உன் மகனை நானும் பார்த்திருக்கிறேன். அவனைப் பற்றி விவரமாகச் சொல்'' எனவே அவளும் ''ஸ்ரீதரன் அரங்கநாதரைப் போல திறமைசாலி. நல்ல புத்திசாலி. சுறுசுறுப்பாகச் செயல்படுபவன். கடினமாக உழைப்பவன். பொறுமை யாய், நிதானமாய் எதையும் செய்பவன்'' என்றாள்.

ஜமீன்தாரரும், ''எல்லாம் சரி. ஆனால் அந்த உயர் பதவியை வகிக்க அவனுக்கு உயர் அந்தஸ்து இருக்க வேண்டாமா?'' என்றார். காமாட்சியம்மாவும் ''அவனுக்கு உயர் பதவி கிடைத்தால் தன்னாலே உயர் அந்தஸ்து வந்து விடுமே'' என்றாள்.

அது கேட்டு ஜமீன்தாரர் புன்னகை புரிந்து அந்த வேலைக்கு ஸ்ரீதரனையே நியமித்தார்.



வேதாளம் சொல்லும் கதை

# கோபமும் மௌனமும்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு அவன் மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! நீ வாய் திறவாமல் உன் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறாயே. இது போலத் தான் சாந்த வர்மன் என்ற மன்னன் செயல்



பட்டான். உனக்குச் சிரமம் தெரியா திருக்க அவனது கதையைக் கூறுகி றேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்லலாயிற்று.

சாந்தவர்மன் சாந்தபுரியை நன்கு ஆண்டு வந்தான். அவன் எல்லோருக் கும் தாராளமாக பணமும் பரிசும் கொடுத்து வந்தான். அவன் நாட்டு மக்கள் சுகமாக வாழவும், நாடு முன் னேறி வளமாக இருக்கவும் திட்டங் களை வகுத்து செயல்படுத்தினான். இப்படி எல்லாம் நல்லதே செய்யும் அவனிடம் ஒரே ஒரு குறை இருந்தது. அது தான் அவனது முன் கோபம். தான் நினைப்பதற்கு மாறாக யார் நடந்தா லும் அவனுக்கு மூக்குக்கு மேல் கோபம் வந்து விடும். ஒரு விருந்தை அவன் பிரமுகர்களுக்கு அளிக் கையில் சாம்பாரில் உப்பு குறைந்த தற்காக தன் அரண்மனைச் சமையல் காரர்களை எல்லாம் நாடு கடத்தி விட்டான்!

தன் உத்தியோகஸ்தர்கள் தவறு செய்தால் அதை பொறுக்க முடியா மல் அவர்களை மன்னன் தூக்கி லிட்டான். மன்னனுக்கு முன் கோபம் வருகிறது என அறிந்த மக்கள் யாருக்கு என்ன நேருமோ என்று பயப்பட்டுக் கொண்டே இருந்தார்கள். ஒரு நாள் ஒரு சாது மன்னனைக் கண்டு ''நான் நம் நாட்டிலுள்ள கோவில்களில் மக்களுக்கு தர்மோபதேசம் செய்ய விரும்புகிறேன். அதற்கு எனக்கு அனுமதி அளிக்க வேண்டும்'' என்று கேட்டார்.

மன்னனும் ''சுவாமி! நீங்கள் யாரென்று தெரியவில்லையே. எங்கிருந்து வருகிறீர்கள்?'' என்று பணிவுடன் கேட்டான்.

''என்னைப் பரமானந்தர் என மக்கள் அழைக்கிறார்கள். நான் இமய மலையில் தவம் செய்து விட்டு நேராக வந்திருக்கிறேன். கடவுளை தியானித்தால் எனக்கு எவ்விதக் கவ லையும் இல்லாமல் நிம்மதி கிடைத் தது. இது போல யாவரும் நிம்மதி பெற அறிவுரை கூற விரும்புகிறேன்'' என்றார்.

மன்னனும் மகிழ்ந்து போய் ''சுவாமி! நீங்கள் இங்கேயே நிரந்திர மாகத் தங்கி உபதேசம் செய்யுமாறு வேண்டிக் கொள்கிறேன்'' என்றான்.

பரமானந்தரோ சிரித்தவாறே ''மன்னா! நான் எந்த இடத்திலும் நிரந்திரமாகத் தங்கக்கூடாது என்று உறுதி பூண்டிருக்கிறேன். ஆனால் நீ

மிகவும் வேண்டிக்கொள்வதால் கொஞ்ச நாட்களுக்கு இங்கு தங்குகிறேன்'' என்றார். மன்னனும் அவருக்கு அரண்மனைப் பூங்காவிலேயே ஒரு குடிலை அமைத்துக் கொடுத்து அவருடைய சௌகரியங்களை கவனித்துக் கொள்ள மருதன் என்ற தோட்டக்காரனை நியமித்தான். கொஞ்ச காலத்திலேயே மருதனும் பரமானந்தரும் நெருங்கிய நண்பர்களாகி விட்டார்கள்.

மருதன் தன் மனைவியுடனும் இருமகன்களுடனும் அதே பூங்காவில் ஒரு குடிசையில் வாழ்ந்து வந்தான். தினமும் காலையில் இரண்டு மணிநேரம் மன்னனுக்கு பரமானந்தர் உபதேசங்களைச் செய்யலானார். அவனும் அவற்றின்படி நடக்க முயன்றான். அதன் பின் பரமானந்தர் ஆலயங்களுக்குச் சென்று அறிவுரை கூறி வரலானார்.

அவர் இரவில் உணவை மருதனின் குடிசையில் அவனது குடும்பத்தவருடன் உண்டு வந்தார். அப்போது அவர் இரு சிறுவர்களுக்கும் நல்ல கதைகளைக் கூறிக் களிப்பித்து வந்தார். ஒரு நாள் பரமானந்தரும், சாந்தவர்மனும் பூங்காவில் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது சில வண்டுகள் பரமானந்தருக்குத் தொந்தரவு கொடுக்கவே, மருதன் ஓடி வந்து தன் கையை ஆட்டி அவற்றை விரட்டினான்.

மருதன் இவ்வாறு செய்தது மன்னனுக்குப் பிடிக்கவில்லை. அதனால் அவன் கோபத்தோடு ''ஏன் இப்படி நீ எங்களிடையே குறுக்கிட்டாய்?



சுவாமிகளை வண்டுகள் துன்புறுத்தினால் நான் விரட்டி இருப்பேனே. இனிமேல் நீ இங்கே இருக்க வேண்டாம். பூங்காவை விட்டுப் போய் விடு'' என்றான். அது கேட்டு மருதன் திகைத்தான். அப்போது பரமானந்தர் ''மன்னா! அவன் மீது ஏன் கோபம் கொள்கிறாய்? அவனது நோக்கம் நல்லது தானே. எதற்கும் சட்டெனக் கோபித்துக் கொண்டு விடலாம். கோபத்தோடு எடுக்கும் முடிவுகள் தவறானவையாகவே இருக்கும். கோபம் வந்தால் அதை அடக்கி சற்று நேரம் எதுவும் பேசாமல் இருந்து விட்டால் முந்தைய சாந்தத்தை அடையலாம். கோபப்பட்டு நீ இப்போது மருதனை வெளியேற்றி விட்டால் பிறகு இவனைப் போன்ற விசுவாசமிக்கவனும் நம்பிக்கையான



வனுமான வேலையாள் உனக்குக் கிடைப்பது அரிதே'' என்றார். அதைக் கேட்ட மன்னன் மருதனை மன்னித்தான்.

பரமானந்தர் கூறிய இந்த அறிவுரை சாந்தவர்மனின் மனதில் நன்கு பதிந்தது. சில வாரங்கள் கழிந்தன. அப்போது பரமானந்தர் மன்னனிடம் ''நான் ஒரே இடத்தில் இருப்பதால் நாட்டின் மற்ற பகுதிகளிலுள்ள மக்களுக்கு என்னால் பணி செய்ய முடியாமல் போகிறது. எனவே நான் இங்கிருந்து மற்ற இடங்களுக்கும் செல்லப் போகிறேன்'' என்றார். மன்னனோ அவர் எங்குமே போகாமல் தன்னுடன் தான் இருக்க வேண்டுமென்றும் வற்புறுத்தினான். ஆனால் பரமானந்தரோ ''அது முடியாது. வேண்டுமானால் மூன்று மாதங்களுக்கு ஒரு முறை இங்கு வந்து உன்னுடன் ஒரு மாதம் கழித்து விட்டுப் போகிறேன்'' என்றார். சாந்தவர்மனும் அதற்கு இணங்கினான்.

பரமானந்தர் அங்கிருந்து சென்றார். பல ஊர்களுக்குப் போய் உரையாற்றி விட்டு மூன்று மாதங்கள் கழித்து சாந்தவர்மனைக் காண வந்தார். அவர் அரண்மனைப் பூங்காவிலுள்ள தன் குடிலில் தான் தங்கினார். ஆனால் மருதன் அவர் வந்ததை கவனிக்கவில்லை. அப்போது இருட்டி விட்டது. பரமானந்தருக்கு தாகம் எடுத்தது. எனவே அவர் ஒரு குடுக்கையை எடுத்துக் கொண்டு பூங்காவிலுள்ள குளத்திற்குப் போய் அதை நீரில் அமிழ்த்தினார். நீர் அதற்குள் 'களக்' 'களக்' என்று பெருத்த சத்தத்துடன் சென்றது.

மருதனின் குடிசை அக்குளத்தருகே தான் இருந்தது. பரமானந்தர் குடுக்கையில் நீர் நிரப்பியபோது ஏற்பட்ட சத்தத்தைக் கேட்ட அவன் ஏதோ கொடிய மிருகம் தான் குளத்திற்கு வந்து நீர் குடிக்கிறது என்று நினைத்து விட்டான். அவன் தன் ஈட்டியை எடுத்து கொண்டு தன் குடிசையிலிருந்து வெளியே வந்து சத்தம் வந்த இடத்தை நோக்கி ஈட்டியை எறிந்தான். அது பரமானந்தரின் உடலில் பாயவே அவர் 'ஆ' வென்று அலறியவாறே விழுந்தார். அக்குரலைக் கேட்ட மருதன் தான் தாக்கியது பரமானந்தரை எனத் தெரிந்து கொண்டான். அவன் ஓடிப் போய் அவரது கால்களில் விழுந்து தன் தவறைக் கூறித் தன்னை மன்னிக்கும்படி வேண்டினான்.

பரமானந்தரும் ''நீ இந்த ஈட்டியை முதலில் என் உடலிலிருந்து எடு. நீ வேண்டுமென்றே இதைச் செய்யவில்லை என்பதை நான் அறிவேன். உன்னை நான் மன்னித்து விட்டேன்'' என்றார்.

மருதன் அவரது உடலிலிருந்து ஈட்டியை எடுத்ததும் அவரது உயிர் உடலைவிட்டுப் பிரிந்தது. அப்போது மருதனுக்குப் பயம் பிடித்து விட்டது. ''மன்னன் நடந்ததை அறிந்தால் நானும் என் குடும்பத்தவரும் அழிந்தே போவோம்'' என்று எண்ணி அவன் தன் மனைவி மக்களுடன் தலைமறைவாகி விட்டான்.

மறுநாள் காவலாளிகள் பரமானந்தரின் உடலைப் பூங்காவில் கண்டார்கள். அவர்கள் மருதனைத் தேடினார்கள். அவனும் அவனது குடும்பத்தவரும் எங்குமே இல்லாதது கண்டு அவன்தான் பரமானந்தரை ஏதோ ஒரு காரணத்திற்காகக் கொன்று விட்டுக் குடும்பத்தோடு எங்கோ ஓடி விட்டான் என்ற முடிவுக்கு வந்தார்கள். அதை அவர்கள் மன்னனிடம்-கூறவே மருதனைத் தேடிப் பிடித்து இழுத்து வரும்படி அவன் கட்டளை இட்டான்.



மருதன் அண்டை நாட்டிற்குப் போய் வேலை செய்து வாழ்ந்த போதிலும் அவன் மனம் மகிழ்ச்சி கொள்ளவில்லை. சாந்தபுரிக்குத் திரும்பிப் போய்விடவே அவன் துடித்தான். ஒரு வருடமான பின் ரகசியமாகச் சாந்தபுரிக்கு வந்து தன் நண்பனைச் சந்தித்தான். அவன் ராஜதர்பாரில் வேலைப் பார்ப்பவனே. மன்னன் தன்னை மன்

னித்து விட்டானா என்று கண்டறிந்து வந்து சொல்லும்படி மருதன் அவனிடம் கேட்டுக் கொண்டான்.

அவன் மன்னனிடம் மெதுவாக மருதனைப் பற்றிப்பேச முயன்ற போது மன்னன் அவனைப் பற்றி எதுவும் கூறவில்லை. பல மாதங்க ளுக்குப் பின் மருதன் கேட்டுக் கொண்டபடி அந்த நண்பன் வாயி லாக மன்னனின் மனநிலையை அறிய முயன்றான். அப்போதும் மன் னன் மருதனைப் பற்றிப் பேசாமலே இருந்தான். மூன்றாவது தடவையில் வந்தது வரட்டும் என்று துணிந்து அவனே மன்னனைக் கண்டு நடந் ததை விவரமாகக் கூறித் தன்னை மன்னிக்கும்படி வேண்டினான்.

சாந்தவர்மனும் ''நீ பரமானந்தரை வேண்டுமென்றே கொல்லவில்லை என்பது எனக்கு தெரியும். நீ முன் போலவே பூங்காவில் இருந்து அதை கவனித்துக் கொள்'' என்றான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! மருதனின் நண்பன் இரு முறைகள் மன்னனிடம் மருதனைப் பற்றிய பேச்சை எடுத்த போது மன்னன் பேசாமல் இருந்தானே. ஆனால் மூன்றாவது தடவையில் மரு தன் வந்து நடந்ததைக் கூறி மன்னிப்புக் கேட்ட போது மன்னன் அவனை மன்னித்துப் பழைய வேலையையும் கொடுத்தானே. இது ஏன்? இக்கேள்வி களுக்கு சரியான பதில் தெரிந்திருந்தும் கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''முதல் இரு தடவைகளில் மருதனின் நண்பன் அவனைப் பற்றிப் பேச முற்பட்ட போது மன்னனின் கோபம் முற்றிலும் அடங்கவில்லை. ஆனால் மருதன் வந்து மன்னனைக் கண்டபோது நீண்ட காலமாகி விட்டது பரமானந் தரின் அறிவுரைப்படி கோபத்தை அடக்கியதால் அவன் மருதனை மன்னித்து மீண்டும் வேலையில் வைத்துக் கொண்டான்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதி லால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக்கிளம்பிப் போய் மீண்டும் முருங்கமரத்தில் ஏறிக் கொண்டது.





# விநாயகர்

சத்தியலோகத்தில் தாமரை மீது அமர்ந்து சிருஷ்டிகளைப் படைத்துக் கொண்டே இருந்த பிரம்மா கல்ப யுகம் முடியப் போகும்போது சற்றுக் கண்ணயர்ந்தார். அவர் தலையை ஆட்டிய போதெல்லாம் மலைச் சிகரங்கள் பிளந்து நெருப்பைக் கக்கின. கரு மேகங்கள் வானில் சூழ்ந்து யானைத் துதிக்கை அளவிற்கு தாரை தாரையாக மழையைப் பெய்வித்தன. உலகெங்கும் நீர் நிறைந்து விட்டது. அவர் கண்களை இறுக மூடிக் கொண்டு இருந்த போது உலகம் எல்லாம் இருண்டு விட்டது.

இப்படி பெரும் பிரளயமே ஏற்பட்ட போது பிரம்மா நன்கு தூங்கி விட்டார். அவருக்குப் பிரளய காலம் இரவு நேரமாகும். மறுபடியும் கண் விழித்தால் புதிய கல்ப காலம் ஆரம்பமாகும். தம் சிருஷ்டித் தொழிலை மீண்டும் ஆரம்பிப்பார். அவர் விழித்தெழ சரஸ்வதி தேவி தனது வீணையை அதிகாலையில் இசைத்துத் துயில் எழச் செய்யும் பூபாள ராகத்தை ஆலாபனை செய்தாள்.

பிரம்மா விழித்து எழுந்து உட்கார்ந்து தன் நான்கு திசைகளிலும் பார்த்தார். உலகம் நீரில் மூழ்கி மலைச் சிகரங்களின் மீது அலைகள் மோதிக் கொண்டிருப்பதை அவர் கண்டார். அந்த அலைகளுக்கு மத்தியில் ஓரிடத்தில் இருந்து ஒளி வருவதை அவர் பார்த்தார்.

அதை உற்றுப் பார்த்த போது ஆலிலை மீது சந்திரனைப் போல ஒளி வீசும் குழந்தை ஒன்று படுத்துத் தன் வலது கால் கட்டைவிரலைத் தன் வாயில் வைத்துச் சப்பிக் கொண்டு இருப்பதை பிரம்மா கண்டார்.

அது கண்டு பிரம்மா கை கூப்பி கண்களை மூடி தியானித்துப் பிறகு கண்களைத் திறந்தார். அந்த ஒளி மய

1. பாலகணபதி



மான, குழந்தை உலகெங்கும் பரவியுள்ள பரப் பிரம்மமே என்பது பிரம்ம தேவனுக்குத் தெரிந்தது. அவர் அக் குழந்தையையே ஆச்சரியத்துடன் மேலும் கவனமாகப் பார்க்கலானார்.

அதற்கு யானையின் தலை இருந்தது. தன் சிறிய துதிக்கையால் அது தன் இடது காலைப் பற்றிக் கொண்டு இருந்தது. அதன் முகத்தில் சற்று அலாதியான ஒளி வீசிக் கொண்டிருந்தது. நான்கு கைகளைக் கொண்ட அதனைப் பார்த்த பிரம்மா திடுக்கிட்டார். ஏனெனில் திடீரென அந்த இலை மீது இருந்த குழந்தை மறைந்தது. அந்த இடத்தில் உயரிய திட்டு ஒன்று தென்பட்டது.

பிறகு கொஞ்சம் கொஞ்சமாக நீரிலிருந்து தரைப் பகுதிகள் வெளிப்படலாயின. பிரம்ம தேவனும் தன் படைக்கும் தொழிலைச் செய்ய முற்பட்டார். முதலில் மலைகளும் நதிகளும் இருக்க வேண்டும் என எண்ணி அவர் தன் கமண்டலத்திலிருந்து நீரை எடுத்து பூமண்டலத்தின் மீது தெளித்தார். பிறகு மரங்களையும், சுரங்கங்களையும் தாதுப் பொருள்களையும் சிருஷ்டித்தார். பின்னர் நடமாடும் ஜீவராசிகளைப் படைக்கலானார்.

முதலில் மீனைக் கடலில் சிருஷ்டித்தார். பிறகு தரை மீது அலையையும் பல மிருகங்களையும் படைத்தார். பட்சிகளை உருவாக்கினார். அதன் பின் மனிதர்கள் உருவாக வேண்டும் என நினைத்துத் தம் கமண்டலத்திலிருந்து நீரை எடுத்துத் தெளித்தார்.

இவ்வாறு பிரம்மா படைக்கும் தொழிலில் ஈடுபட்டிருந்த போது அவரது மனைவி சரஸ்வதி தேவி வீணையை மீட்டி வாசித்துக் கொண்டிருந்தாள். திடீரென அவளது வீணை வாசிப்பில் அபஸ்வரம் வந்தது. அது கேட்டு சரஸ்வதி தேவி திடுக்கிட்டுக் கீழே பார்த்தாள். பிரம்மாவும் கீழே நோக்கினார்.

திடீரென மலைகள் தலைகுப்புற கடலில் விழுந்தான். அவற்றின் சிகரங் கள் கீழே போய்விட அடிப் பகுதிகள் குடைபோல மேலே இருந்தன. அவற்றின் மீது சூரிய ஒளி விழுந்தது. ஆனால் கதிரொளி மலைச் சிகரங் களின் மீது விழவில்லை. ஏனெனில் அவை கடலுக்கு அடியிலேயே இருந்தன.

நதிகள் கடலிலிருந்து எதிர் திசையில் போய் உயரமான இடங்களில் ஏறிப் பாயலாயின. மரங்கள் தலை கீழாகி வேர்ப் பகுதிகள் ஆகாயத்தை நோக்கி நின்றன. கடலின் மேற்பரப்பில் நீர் வாழ் பிராணிகள் மிதந்தன. நீந்தின. சில பறவைகள் போல உயரக் கிளம்பிப் பறந்தன.

மிருகங்களோ தலைகளாலும் கைகளாலும் நடக்கலாயின. எல்லாமே விசித்திரமாக முற்றிலும் தம் இயல்பிற்கு மாறாக நடக்கலாயின. மனிதர்களில் சிலருக்கு இரண்டு தலைகள். அதில் ஒன்று பெண்ணுடையதாயும் மற்றது ஆணுடையதாயும் இருந்தது. அந்தந்த அவயங்கள் இருக்க வேண்டிய இடத்தில் இல்லாமல் தாறுமாறாக மாறி அமைந்து இருந்தன. இப்படிப் பல விசித்திர உருவங்கள் கொண்டு அவர்கள் விளங்கினர்.

சிலர் சாண் உயரமே இருந்தனர். சில பெண்களோ பெரிய யானை போலப் பருத்துக் காணப்பட்டனர். பனைமரம் போலக் கால்கள் சிலருக்கு. மூன்று கால்கள் சிலருக்கு. நான்கு ஒட்டகக் கால்கள் வேறு சிலருக்கு. இப்படி விசித்திர சிருஷ்டிகளாக இருந்தன. மிருகங்களும் மனிதர்களும் போடும் சத்தமோ காதைப் பிளந்தது. சாண் மனிதன் யானை போன்ற பெண்ணை பிரம்மாவிடம் காட்டி ''இப்படிப்பட்ட மனைவியுடன் நான் எப்படி வாழ முடியும்!'' என்று கேட்டான். இது போல பல உருவங்கள் தம் பிரச்சினைகளுக்கு வழிகூறுமாறு பிரம்ம தேவனிடம்



வந்து கேட்டன. பிரம்மாவின் நான்கு தலைகளுமே அந்த விசித்திரக்காட்சிகளைக் கண்டு சுழன்றன. அவர் சரஸ்வதி தேவியைப் பார்த்தார். சரஸ்வதி தேவியோ எதுவும் கூறாமல் புன்னகை புரிந்தாள்.

பிரம்மாவோ ''ஏன் இப்படி எல்லாம் தாறுமாறாகி விட்டன? நான் சரியாகத்தான் சிருஷ்டித்தேன்?'' என சற்று உரக்கவே கூறினார். அவரது குரல் பல திசைகளிலும் எதிரொலித்தது.

அப்போது திடீரென ஒரு ஒளியை அவர் கண்டார். அதில் ஒரு அற்புத உருவம் தென்பட்டது. அதற்கு யானைத் தலை இருந்தது. நான்கு கைகளிலும் கயறும், அங்குசமும், கலசமும், தண்டமும் இருந்தன. சந்திரன் போன்ற அழகான உருவம். வெண்பட்டு படபடவெனக் காற்றில்



பறக்க அதன் மீது போர்த்தி இருந்தது.

சரஸ்வதி தேவி அந்த உருவத் தருகே போய் நின்று நாதநாமக் கிரியை, மாயாமாளவ கௌளம், ஹம்ஸத்வனி ஆகிய ராகங்களில் வீணையில் பாட்டுக்களை இசைத் தாள். யானைமுகத்தோனாகிய அந்த உருவம் ஆலிலை மீது நின்று பிரம்மனை ஆசீர்வதித்தது. அதனைச் சுற்றிலும் ஒளி வீசியது.

பிரம்மா கை கூப்பி வணங்கி ''மகானுபாவரே! இப்படி அற்புத வடிவைத் தாங்கியுள்ள தாங்கள் யாரோ?'' எனப் பணிவுடன் கேட் டார். அந்த உருவமும் ''அப்பனே! பிரம்மதேவா! ஏதாவது ஒன்றைத் தொடங்க நினைத்தால் இடையூறு களைப் போக்கும் விக்கினேஸ்வரன் நான். எந்த ஒரு வேலையையும் ஆரம் பிக்கும் போது என்னை நினைத்தால் போதும், உடனே அதற்கு எதிர்ப் படும் இடையூறுகளை என் தண்டத் தால் போக்குவேன். அந்த வேலையும் வெற்றிகரமாக முடியும். நான் பஞ்ச பூதங்களாகிய நிலம், நீர், நெருப்பு, காற்று ஆகாயம் ஆகிய பூதகணங்க ளின் அதிபதியான கணபதி. பயிர் பச்சைகளைக் காப்பவன். இம்மாதிரி விக்கினங்களை அதாவது இடையூறு களைப் போக்கும் என்னை விக்கி னேஸ்வரன் என்று அழை'' என்றது.

பிரம்மாவும் ''விக்கினேஸ்வரா! ஆனால் என் படைப்புகளுக்கு ஏன் இப்படிப்பட்ட விபரீத இயல்புகள் ஏற்பட்டன? ஏன் இப்படி உருமாறி தாறுமாறாகி விட்டன? இனி நல்ல விதமாக எப்படி சிருஷ்டி செய்வது? என்று கேட்டார்.

''எதற்கும் இடையூறு ஏற்படக் கூடும் என்பதை உனக்கு அறிவுறுத் தவே இப்படி எல்லாம் நடந்திருக் கிறது. ஆலிலையில் குழந்தையாக அமர்ந்து இப்போது பாலகணபதியாக நான் விளங்குகிறேன். என்னை அப் போது நீ நினைக்கவில்லை. அதனா லேயே இப்படிப்பட்ட இடையூறு கள் வந்தன. என்னை முதலில் நினைப்பது என்றால் வரப்போகும் இடைஞ்சல்கள் பற்றி முன் எச்ச ரிக்கை அடைவது என்பதே பொருளா கும். பிரம்மாவானாலும் சரி, வேறு யாராயினும் சரி, தாம் ஒரு வேலையை ஆரம்பிக்குமுன் அதற்கு வரக்கூடிய இடையூறுகளைப் பற்றி எண்ணி எச்சரிக்கை அடைந்து நல்ல விதமாக அந்த வேலை முடியப்பாடு

பட வேண்டும். யானை அடி எடுத்து வைக்குமுன் அந்த இடம் கெட்டியாக இருக்கிறதா என்று பரீட்சித்துப் பார்க்கும். மிருகங்களில் யானைக்கே அறிவு அதிகம். யானை போன்ற அறிவு இருக்க வேண்டும் என உணர்த் தவே நான் யானைமுகனானேன். நீ தூங்கிக் கொண்டிருந்தபோது சோமகா சுரன் உன் நான்கு வேதங்களைக் கவர்ந்து கொண்டு போய்க் கடலுக்கு அடியே ஒளித்து வைத்து விட்டான். விஷ்ணு மச்சாவதாரம் எடுத்து வந்து ஆலிலை மீது படுத்திருந்த என்னிடம் கொடுத்தார். இதோ அவற்றைக் கொடுக்கிறேன். வாங்கி மீண்டும் நன்கு படித்து அதன் பின் நீ உன் சிருஷ்டித் தொழிலை ஆரம்பி'' என கூறி விக்கினேஸ்வரர் பிரம்மாவிடம் வேதங்களைக் கொடுத்தார்.

பிரம்மா அவற்றை வாங்கிக் கொண்டு மகிழ்ந்து போய் விக்கி னேஸ்வரரைத் துதி செய்து 'இனி என் தொழிலை ஆரம்பிக்குமுன் உன்னை நினைக்கும்படியான வரம் அருள் வாய். இப்போது தாறுமாறாகியுள்ள உருவங்கள் மறையும்படிச் செய்ய வேண்டும்'' என வேண்டினார்.

விக்கினேஸ்வரனின் சக்தியால் அதுவரை விகார உருவில் படைக்கப் பட்டவை எல்லாம் மறைந்தன. அப் போது விக்கினேஸ்வரர் ''பிரம்ம தேவனே! இந்த வக்கிரங்களைப் போக்கியதால் எனக்கு வக்கிரதுண் டன் என்ற பெயரும் ஏற்படும். அதற்கு ஏற்ப என் துதிக்கையையும் கோணலாக வைத்துக் கொள்கிறேன். இனிமேல் இந்த மாதிரி வக்கிர சிருஷ்டி ஏற்படாமல் இருக்க என்னை தியானித்து சிருஷ்டித் தொழிலை ஆரம்பி. மக்களின் மன சங்கல்பம் சித்தி அடைய, சித்தி விநாயகன் என்ற பெயரும் பெறுவேன். எல்லா கணங்களுக்கும் அதிபதியாக கணபதி என்ற பெயரில் சிவனுக்கும் பார்வ திக்கும் மகனாகப் பிறக்கிறேன்'' எனக் கூறி மறைந்தார்.

பிரம்மாவும் ''விக்கினேஸ்வராய நமஹ'' எனக் கூறித் தம் சிருஷ்டி தொழிலை ஆரம்பித்தார். அது நன்கு நடந்தது.



# செய்திச்சுடர்

## நட்சத்திரங்களும் மரங்களும்




ஹிந்து பஞ்சாங்கப்படி அசுவினியிலிருந்து ரேவதி வரை இருபத்தேழு நட்சத்திரங்கள் உள்ளன. ஒவ்வொரு ஹிந்துவும் இந்த நட்சத்தி ரங்களில் ஒன்றில் பிறந்தவனாகக் கருதப்படுகி றான். இந்த இருபத்தேழு நட்சத்திரங்களும் மலர், மிருகம், பறவை, மரம் ஆகியவற்று டன் தொடர்பு படுத்தப்பட்டுள்ளன. கோயம் பத்தூரின் இந்திய வேத அமைப்பு அதனருகே உள்ள மேட்டுப்பாளையத்தின் ஒரு பள்ளி யைத் தேர்ந்தெடுத்து அதன் மாணவர்களை அவர்கள் பிறந்த நட்சத்திரப்படி மரக்கன்று களை நடும்படிச் செய்தது. அம்மாணவர்களும் தாம் அப்பள்ளியை விட்டுச் செல்லும் வரை அம்மரக்கன்றுகளைக் காத்து வருவதாக உறுதி மொழி எடுத்துக் கொண்டனர். இந்த அமைப்பு மேலும் பல பள்ளிகளில் இது போலச் செய்யத் திட்டமிட்டுள்ளதாம்.

## நல்ல சலவை!




கோபன்ஹேகனில் பல மாடிக் கட்டடத்து ஒரு மாடியிலிருந்த சில்வெஸ்டர் என்ற மூன்று மாதப் பூனைக்குட்டி அவ்வீட்டு வாஷிங் மெஷினுக்குள் குதித்து விட்டது. இதை அறி யாத அவ்வீட்டுப் பெண் வாஷிங்மெஷினை இயக்கவே பூனைக்குட்டி கத்தலாயிற்று. அவ ளால் மெஷினை நிறுத்த முடியவில்லை. ஏனெனில் ஒரு குறிப்பிட்ட நேரம் வரை அது இயங்க பட்டனை அழுத்தி இருந்தாள். மெஷின் நின்றபின் அந்த பூனைக்குட்டியை வெளியே எடுத்த போது அதன் நிறம் நீலமாக மாறி இருந்தது. அதனை ஒரு மிருக வைத்திய ரிடம் எடுத்துச்செல்ல, அது குணமடைய ஒரு வாரம் பிடித்தது. அதை வீட்டிற்குக் கொண்டு வந்ததும் அது வாஷிங்மெஷினைக் கண்டதும் மீண்டும் அதனுள் குதித்தது!

## மரங்களுக்கு மின்னல் தாங்கிகள்!

சிங்கப்பூரில் மின்னல் மரங்களைத் தாக்கி அழிப்பதைத் தடுக்க மரங்களின் மீது மின்னல் தாங்கிகளைப் பொருத்தப் போகிறார்களாம். அங்கு ஒரு ஆண்டில் சராசரியாக மின்னல் தாக்கி பத்து மரங்கள் அழிகின்றனவாம். இவற்றில் மூன்று முழுவதுமாக அழிந்தும் மற்றவை மின்னல்தாக்கி பாதி எரிந்தும் மற்றப் பாதி பூச்சிகளால் அரிக்கப்பட்டும் அழிகின்றன வாம். இவற்றில் பொருத்தப்படும் தாமிர மின்னல் தாங்கிகள், மின்னல் மரத்தில் தாக்காமல் அதை பூமிக்குள் செலுத்தி விடுமாம். ஒரு மின்னல் தாங்கியின் விலை மூவாயிரம் அமெரிக்க டாலர்கள். தற்போது முப்பது மீட்டர் உயர முள்ள நூறு மரங்களில் மின்னல் தாங்கிகளைப் பொருத்த நகர நிர்வாகம் திட்டமிட்டுள்ளது.




## சாம்சனும் டிலைலாவும்




பைபிளில் குறிப்பிடப்பட்ட இவர்களைப் பற்றி செய்தி அல்ல இது. பார்பராபியரோ என்ற மிகப்பெரிய மூதாட்டி லாஸ்ஏஞ்ஜெல்சிலிருந்த இரு நாய்களுக்கு அப்பெயர்களை வைத்தார். பார்வையற்ற ஒரு சிறு நாயை ஒரு பெரிய நாய் வழிகாட்டி அழைத்துச் செல்வதை அவர் ஒரு நாள் கண்டார். அதன் பின் தொடர்ந்து ஐந்து நாட்கள் அவற்றை அவர் பார்த்தார். பெரியநாய் சொல்கிறபடி எல்லாம் சிறிய நாய் கேட்டு அதன்படி நடப்பதைக் கண்டு ஆச்சரியப் பட்டார். அவற்றின் மீது இரக்கப்பட்டு அவற்றைத் தன் வீட்டிற்குக் கூட்டி வந்து வளர்த்து வரலானார். அவற்றிற்கு அவர் வைத்த பெயர்கள் தான் சாம்சனும், டிலைலாவும்.

# சிரிப்பூட்டும் சிந்தனையாளர்கள்—பீர்பல்



அக்பர் சக்கரவர்த்தியின் தர்பாருக்கு ஒருவன் வந்து ''சக்கரவர்த்தியே! இஸ்பஹானி லிருந்து புதுவித அத்தர் வந்துள்ளது. அது பற்றித் தங்களது மேன்மையான அபிப்பிராயத்தைக் கூறவேண்டும்'' எனச் சொல்லி அவரிடம் ஒரு சிறு அத்தர் பாட்டிலைக் கொடுத்தான்.

அக்பரும் பாட்டிலின் மூடியைத்திறந்து முகர்ந்து விட்டுப் புன்னகை புரிந்து அவையோரிடம் ''மீர்ஷம்சுதீன் இந்த பாட்டிலைக் கொடுத்ததை நீங்கள் பார்த்தீர்கள். கொடுப்பவர் கை கீழேயும் வாங்கிக் கொள்பவர் கை உயர்ந்திலும் எப்போது இருக்கும் என்று யாராலாவது சொல்ல முடியுமா?'' என்று கேட்டார்.



தான் ஏதோ தவறு செய்து விட்டதாக எண்ணி ஷம்சுத்தீன் திகைத்து நின்றான். அவன் நடுநடுங்கி ஏதோ சொல்ல நினைக்கையில் அக்பர் ''நீ வேறு எதுவும் சொல்ல வேண்டாம். என் கேள்விக்கு பதில் மட்டும் தெரிந்திருந்தால் சொல்'' என்றார்.

சபையோர் தமக்குள் எதேதோ பேசி முணுமுணுத்தார்கள். அக்பர் அம்மாதிரிப் புதிர் போடுவதை அவர்கள் பலமுறை கேட்டிருக்கிறார்கள். ஷம்சுத்தீனும் தயங்கியவாறே சபையோரிடையே ஓரிடத்தில் அமர்ந்தான்.



சபையோரில் வேறொருவர் எழுந்து கைகள் உயரத்திலும் கீழேயும் இருப்பது ஒரு சிக்கலான பிரச்சினை இல்லையே'' எனவே, அக்பர் அது கேட்டுக் குறுநகை புரிந்தார்.

அக்பர் யாரையோ தேடுவது போல சுற்றிலும் தர்பாரில் அமர்ந்திருந்தவர்களைப் பார்த்தார். பிறகு அவர் ''யாராலும் என் கேள்விக்கு பதில் சொல்ல முடியவில்லையா? பீர்பல் எங்கே?'' என்று கேட்டார். பீர்பல் அப்போது அங்கே இருக்கவில்லை தான்.

அப்போது பீர்பல் தர்பாருக்குள் நுழைந்தவாறே ''இதோ வந்து கொண்டிருக்கிறேனே'' என்றார். அக்பரும் ''வாருங்கள் பீர்பல்!'' எனக் கூறித் தன் கேள்வியை அவரிடம் கேட்டார்.

பீர்பல் அங்கிருந்த எல்லோரையும் பார்த்துவிட்டு அக்பரருகே சென்றார். அவர் ஒரு பொடி டப்பியை எடுத்து அக்பரிடம் நீட்ட அக்பரும் ஒரு சிட் டிகை மூக்குப் பொடியை எடுத்துக் கொண்டார். பீர்பலும் ''ஒருவர் பொடி டப்பியை நீட்டி மூக்குப் பொடியை கொடுக்கும் போது கொடுப்பவர் கை கீழேயும் மூக்குப் பொடியை வாங்கிக் கொள்பவர் கை உயரத்திலும் இருக்கும்'' என்றார்.

# இந்திய நடனங்கள்
# களிப்பூட்டும் கதக்

பதினாறாம் நூற்றாண்டில் மால்வாவை ஆண்ட பாஜ்பகாதுர் ஒரு போரில் தோற்று மாண்டூ என்ற ஊருக்குப்பின் வாங்கிச் சென்றார். அங்கு அவர் ரூபமதி என்ற ரஜபுத்திர அரசகுமாரியை விரும்பி மணம் செய்து கொண்டார். அதன் பின் இன்பமாக வாழ்க்கை நடத்தலாம் என்ற அவரது ஆசையில் மண் விழுந்தது. ஆக்ராவிலிருந்த முகலாய மன்னர் அக்பர் ரூபமதியின் அழகைப் பற்றிக் கேள்விப்பட்டு மாண்டூக் கோட்டையைக் கைப்பற்றி ரூபமதியைக் கொண்டு வரும்படிக் கட்டளை இட்டுத் தம் படைகளை அனுப்பினார்.

கடும் போர் நிகழ்ந்தது அதில் பாஜ்பகாதுர் தோற்று உயிர் தப்பி ஓடினார். ரூபமதி எதிரிகளிடம் அகப்பட விரும்பாமல் தற்கொலை செய்து கொண்டாள். ரூபமதியை ஆக்ராவுக்குக் கொண்டு செல்ல முடியாது போயினும் முகலாயர்கள் அப்பகுதியின் நடனக்கலையைத் தம்முடன் எடுத்துச் சென்றனர். மாண்டூவையும் அதைச் சுற்றியிருந்த பகுதியிலும் இருந்த சுமார் முன்னூற்றைம்பது நடனக் கலைஞர்கள் ஆக்ரா விற்குக் கொண்டு செல்லப்பட்டனர். இவ்வாறு முகலாய தர்பாருக்கு இந்திய நடனக் கலையின் ஒரு நடனமுறை சென்றது.

இந்தியப் பண்பாடும் முஸ்லிம் பண்பாடும் கலக்க இம்மாதிரி வாய்ப்பு ஏற்படவே கதக் நடனம் உருவாயிற்று. அக்பர் காலத்தில் முகலாயர்களுக்கும் ரஜபுத்திர மன்னர்களுக்கும் தொடர்புகள் ஏற்பட்டன. இதனால் இந்திய முகலாய முறைகள் எனப் புதிதாக ஒன்று தோன்றியது. இவற்றில் ஒன்று தான் கதக் நடனம். இந்த நடனம் கோவில்களில் ஆடப்படாமல் அரசசபைகளிலும் பொது அரங்கங்களிலும் ஆடப்பட்டது. இது சாஸ்திரீய முறையில் அமையவும் இல்லை. இது வளர்ச்சியுற்று பதினெட்டாவது நூற்றாண்டில் ஒரு நிரந்திர நிலையை அடைந்தது. புதிய முறைகளையும் உத்திகளையும்





கொண்டு கதக் தனித்தன்மையைப் பெற்றது.

பதினாறாவது நூற்றாண்டில் கதக் நடனக்கலைஞர்கள் இறுக்கமான சூடிதார்களையும் பைஜாமாக்களையும் அணிந்து வந்தார்கள். முகலாய ஓவியங்களில் நடனக் கலைஞர்கள் நீண்ட அங்கிகள் அணிந்திருப்பதையும் அதனுள் சூடிதார் அணிந்திருப்பதையும் வரைந்து காட்டி இருக்கிறார்கள். பதினாறாவது நூற்றாண்டின் இறுதியில் நடனக்கலைகள் நூபுர் எனப்படும் கெட்டியான காப்புகளில் சலங்கைகளை இணைத்துக் கால்களில் அணிந்து ஆடலானார்கள்.

இந்திய நடனங்களில் கதக்கைப் போலல்லாமல் ஸ்வரங்களும் ராகங்களும் அதிக முக்கியத்துவம் பெறுகின்றன. ஆனால் கதக்கில் தாளமே பிரதானமாக உள்ளது. தாளத்திற்கு ஏற்ப நடனக் கலைஞர்களின் காலசைவுகள் நன்கு தென்படுகின்றன. பெரும்பாலும் இந்துஸ்தானி சங்கீத முறையில் அமைக்கப்பட்ட கிருஷ்ணலீலாக் காட்சிகளை ஆடிக் காட்டுகிறார்கள். பக்கவாத்தியங்களாக சாரங்கியும் தபலாவும் பயன்படுத்தப்படுகின்றன.

கதக் நடனத்தைப் பிரபலப்படுத்தியவர்களில் லக்னௌவைச் சேர்ந்த மகாராஜ் பிந்தாதீனையும் அவரது சகோதரர் கலகாவையும் கூறலாம். அவர்களது சீடர்கள் அச்சன் மகா ராஜூம்லச்சு மகாராஜூம் ஆவர். மற்றும் பிர்ஜூமகாராஜூம் சம்பூமகாராஜூம் இந்த நடனக் கலையில் பெயர்பெற்றவர்கள்.

**இவை பொதுவாக அனுசரிக்கப்படுபவை**

- கதக் நடனக்கலைஞர் ஒரு தோளை உயர்த்தி மற்றதைத் தாழ்த்தி ஆடுகிறார் இதற்கு கஸ்மஸக் என்று பெயர்.
- இக்கலைஞர்கள் தம் துள்ளல்களாலும் குதிப்புகளாலும் யாவரையும் கவர்கிறார்கள். இரு கால்களை உயரத்தூக்கி சில விநாடிகள் நின்று காட்டப்படுவது இதில் ஒரு சிறப்பாகும். வட்டமாய் சுற்றித் தம்மை தாமே சுழலக் காட்டுவதும் இதில் ஒரு சிறப்பு அம்சமாகும். இது இந்நடனத்தின் உச்சகட்டமாக இருக்கும்.
- கதக் நடனத்தில் தான் நடனக் கலைஞர்தானே பாடியவாறு அதற்கேற்ப கால் அசைவுகளைத் தாளத்திற்குத் தக்கபடி செய்கிறார்.

# மகர சங்கராந்தி

மகர சங்கராந்தி என்ற பண்டிகை ஜனவரி மாதத்தில் இந்தியா முழுவதிலும் கோலாகலமாகக் கொண்டாடப்படுகிறது. இந்த நாள் உத்தராயனத்தின் ஆரம்பம். இப்போது முதல் பூமியின் வடபாதிப் பகுதி சூரிய வெப்பத்தை அதிகமாகப் பெறுகிறது. சூரியன் மகர ராசியில் நகர்ந்து வருவதாக ஒரு எண்ணம் மக்களிடையே உள்ளது.

இந்த உத்தராயன காலத்தில் இறப்பவர் மறுபிறப்பு இல்லாது மோட்சத்தை அடைகிறார்கள் என்ற நம்பிக்கை நம் நாட்டில் உள்ளது. அதனால் தான் மகாபாரதத்தில் கூறப்பட்ட பிதாமகர் பீஷ்மர் பாரதப் போரில் படுகாயமுற்று உத்தராயன புண்ணிய காலம் வரும் வரை அர்ஜுனன் அமைத்துக் கொடுத்த அம்புப் படுக்கையில் படுத்திருந்தாராம். அவர் தம் மரணத்தைத் தாம் விரும்பும்போது அடையலாம் என்ற வரத்தைப் பெற்றிருந்ததால் தட்சிணாயன காலத்தில் காயமுற்ற அவர் மோட்சத்தை அடைய உத்தராயன ஆரம்பம் வரை காத்திருந்தாராம். சூரியன் மகர ராசிக்குள் வந்ததும் அவர் மறுபிறவி அடையாதிருக்க உயிர் நீத்தார்.

## தமிழ்நாடு

மகர சங்கராந்தியைத் தமிழ்நாட்டில் பொங்கல் பண்டிகை என்று கொண்டாடுகிறார்கள். இது நான்கு நாட்கள் கொண்டாடப்பட்ட போதிலும் மகர சங்கராந்தியன்று பொங்கல் பண்டிகை எனப் பொங்கல் வைத்துக் கொண்டாடுகிறார்கள். இது உழவர்கள் பண்டிகையாகக் கருதப்படுகிறது.

இந்த நான்கு நாள் பண்டிகையில் முதலாவது நாள் 'போகி' எனப்படுகிறது. அன்று வீடுகளைச்சுத்தம் செய்து உபயோகமற்ற வேண்டாத பொருள்களை ஓரிடத்தில் குவித்து விடியற்காலையில் எரிய விடுகிறார்கள். இதற்கு அடுத்த நாள் பொங்கல்



விழா. கிராமத்து விவசாயிகள் புது மண்பானைகளில் பொங்கல் சமைக்கிறார்கள். புத்தாடைகள் அணிகிறார்கள். வயல் வெளிகளில் விருந்து படைக்கிறார்கள். இதற்கு அறுவடை செய்த நெல்லின் அரிசியையும் தோட்டங்களில் அப்போது விளைந்த காய்கறிகளையும் பயன்படுத்துகிறார்கள். நகரங்களிலும் இப்பண்டிகையன்று வெல்லம் போட்டுப் பொங்கல் தயாரிக்கிறார்கள்.

வீட்டு வாசல்களில் பெரிய கோலங்கள் போடப்படுகின்றன. வீடுகள் வெள்ளையடிக்கப்படுகின்றன. மாவிலைத் தோரணங்கள் கட்டப்படுகின்றன. அன்று சூரிய பகவானைத் துதித்து பூஜை செய்கிறார்கள்.

'பொங்கலு' க்கு அடுத்த நாள் மாட்டுப் பொங்கல். மனிதர்களுக்குப் பெரிதும் உதவும் எருதுகளும் பசுக்களும் நன்கு அலங்கரிக்கப்படுகின்றன. கொம்புகளில் வண்ணம் தீட்டி சலங்கைகளையும் மணிகளையும் அவற்றில் கட்டுகிறார்கள். அன்று அவற்றிற்கென தயாரிக்கப்பட்ட பொங்கல் படைக்கப் படுகிறது. சில இடங்களில் ஜல்லிக்கட்டு எனப்படும் வீர விளையாட்டுகள் நடைபெறுகின்றன. ரேக்ளா பந்தயம் எனப்படும் எருதுகளின் ஓட்டப் பந்தயங்களும் நடத்தப்படுகின்றன.

நான்காவது நாள் காணும் பொங்கல் என்று கொண்டாடப்படுகிறது. அன்று உறவினர்களைச் சந்திக்கவும் அழகான இடங்களைக் காணவும் யாவரும் தம் குடும்பங்களுடன் செல்கிறார்கள். சில பகுதிகளில் சிறுமிகள் கும்மி, கோலாட்டம் என்று ஆடிப் பாடி மகிழ்கிறார்கள். அவர்களுக்குப் பணமும் கரும்புத்துண்டுகளும் பரிசுகளாகக் கிடைக்கின்றன.

## ஆந்திரப்பிரதேசம்

தமிழ்நாட்டைப்போலவே மகர சங்கராந்திப்பண்டிகை முதலில் போகிப் பண்டிகையுடன் ஆரம்பமாகிறது. இங்கும் இது அறுவடைப் பண்டிகைதான். போகியன்று வீடுகள் சுத்தப் படுத்தப்பட்டு அலங்கரிக்கப் படுகின்றன. விடியற்காலை பனி கொட்டும் வேளையில் தீ மூட்டி அதைச் சுற்றி உட்கார்ந்து பாடி குளிர் காய்கிறார்கள்.

மகர சங்கராந்தி இங்கு 'பெத்த பண்டுக' எனக் கூறப்படுகிறது. இந்நாளில் விவசாயிகள் தம் வயல்களில்



வேலை செய்து வரும் ஆட்களுக்கும், வேலைக்காரர்களுக்கும் விருந்து அளிக்கிறார்கள். மூன்றாவது நாள் 'கனுமு' எனப்படுகிறது. அன்று ஓய்வு எடுத்துக் கொண்டு விருந்து உண்கிறார்கள். பல விளையாட்டுப் போட்டிகளும் பந்தயங்களும் நடத்தப்படுகின்றன. கோழி, ஆடு, மாடு சண்டைகள் நடத்தப்படுகின்றன. சில இடங்களில் முக்கனுமு என்று எருதுகளும் பசுக்களும் அலங்கரிக்கப்பட்டு பூஜிக்கப்படுகின்றன. அவற்றிற்கு நல்ல உணவு கொடுத்து ஊர்வலமாகவும் நடத்திச் செல்கிறார்கள்.

## அஸ்ஸாம்

அஸ்ஸாமில் மகர சங்கராந்தியின் போது பாட்டும், கூத்தும், கொம்மாளமும் விருந்தோடு இருக்கும். இங்கு இதனை மாகபிஹா அல்லது போகாலி பிஹா என்கிறார்கள். இவர்கள் போக் என்பது விருந்தையும் கேளிக்கையையும் குறிப்பதாகும்.

இப்பண்டிகைக்கு முதல் நாளை உருகா என்கிறார்கள். இது பௌச மாதத்தின் கடைசி நாள். இந்நாளில் அறுவடைக்குப் பின் காலியாக விடப்பட்ட குடிசைகளுக்கு விவசாயிகள் செல்கிறார்கள். இக்குடிசை பேலாகர் எனப்படுகிறது. மேஜி எனப்படும் ஒரு மேடையையும் அப்போது அமைக்கிறார்கள். பெண்கள் பல தின்பண்டங்களைத் தயாரிக்கிறார்கள். இரவில் மேஜி எனப்படும் மேடையை அவர்கள் சுற்றிச் சுற்றிப் பாடிக் கொண்டு வருகிறார்கள். அதன்பின் அதிகாலையில் அவர்கள் குளித்து கடவுளைத் துதிக்கிறார்கள்.



## மற்ற பகுதிகளில்

இந்தியாவின் மற்ற பகுதிகளிலும் மகர சங்கராந்தி கோலாகலமாகக் கொண்டாடப்படுகிறது. பஞ்சாபில் இந்த அறுவடைப் பண்டிகை லோஹரி எனப்படுகிறது. ஆண்களும் பெண்களும் அவர்களது வழக்கப்படி பாங்க்ரா என்ற நடனத்தை தீயைச் சுற்றி வந்து நடனமாடுகிறார்கள். பெண்கள் தம் கைகளிலும் பாதங்களிலும் மேஹந்தியால் (மருதாணி) விதவிதமாய் சித்திரங்களை வரைந்து அழகுற விளங்குகிறார்கள்.

மேற்கு வங்காளத்தில்மகர சங்கராந்தியன்று கங்கை நதி சமுத்திரத்தில் சேரும் இடமாகிய கங்காசாகர் என்ற தீவுப் பகுதிக்குச் சென்று புனித நீராடுகிறார்கள். இதனால் தமது பாவங்கள் தம்மை விட்டுப்போய் விடுமென அவர்கள் நம்புகிறார்கள். அது போது கங்காசாகர் மேளா என்ற பெரும் விழாச் சந்தையும் கூடுகிறது.

கர்நாடகத்திலும் இது அறுவடை விழாவாகவே கொண்டாடப்படுகிறது. எருதுகள் அலங்கரிக்கப்பட்டு ஊர்வலமாக நடத்திச் செல்லப்படுகின்றன. ஆண்களும் பெண்களும் புத்தாடைகள் அணிந்து கரும்புகளை எடுத்துக் கொண்டு வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறார்கள். தேங்காய் வறுத்த பருப்பு வகைகளையும் கொடுக்கிறார்கள். பட்டங்களைப் பறக்க விட்டு மகிழ்கிறார்கள்.



குஜராத்திலும் மகர சங்கராந்தியின் போது பட்டங்களைப் பறக்க விடுகிறார்கள். இது ஒரு சுபதினமாகக் கருதி மாணவர்களுக்குப்படிக்கப் பணமும், பரிசுகளும் அளிக்கிறார்கள்.

கேரளத்தில் வருடாந்திர சபரி மலை யாத்திரை மகர சங்கராந்தி நாளில் முடிவடைகிறது. அய்யப்ப பக்தர்கள் அன்று மகரஜோதியை அடிவானத்தில் காண லட்சக்கணக்கில் கூடுகிறார்கள்.

மகர சங்கராந்தி இந்தியாவில் பல பகுதிகளில் வெவ்வேறு விதமாகக் கொண்டாடப்பட்டாலும் அதன் அடிப்படை ஒன்று தான். தீபாவளியின் போது ஒளிமயமாக்குவது போல மகர சங்கராந்தி வயல்களில் நல்ல அறுவடை அடைந்ததைக் காட்டி யாவரும் சுகமாக வாழ வேண்டும் என்பதை வலியுறுத்துகிறது.

## தமிழ்நாட்டு கிராமியக் கதை

தமிழ்நாடு என்றதும் எல்லோர் மனதிலும் காஞ்சிபுரப் பட்டுப் புடவைகளும், இட்டிலி, தோசை, கர்நாடக இசை, பரதநாட்டியம், திருக்கோயில்கள் என்பனவே நினைவிற்கு வரும். கிறிஸ்து பிறப்பதற்கு முன்பே இங்கு ஒரு சாம்ராஜ்யம் இருந்தது. தமிழ், இந்தி யாவின் மிகப் பழைய மொழிகளில் ஒன்றாக இருந்து, இன்றும் பேச, படிக்க எழுதப்படுகிறது.

தமிழ்நாட்டின் வடக்கே கர்நாடகம், ஆந்திரபிரதேஷ் என்ற மாநிலங்கள் உள்ளன. கேரள மாநிலம் மேற்கே உள்ளது. கிழக்கே வங்காள விரிகுடாவும் தெற்கே இந்து மகா சமுத்திரமும் உள்ளன. தமிழ்நாட்டின் தெற்கில் அதன் முனை கடலில் சென்று மூன்று புறங்களிலும் கடல்களால் சூழப் பட்டுள்ளது. இது தான் கன்னியாகுமரிமுனை. மேற்குத் தொடர் மலையும் கிழக்குத் தொடர் மலையும் தமிழ் நாட்டில் வந்து ஒன்று சேர்கின்றன. உதக மண்டலம், கொடைக்கானல், கோத்தகிரி, ஏற்காடு போன்ற ஊர்கள் கோடைவாசத் தலங்கள். இவை மலைகளின் மீது அமைந்துள்ளன.

தமிழ்நாட்டின் பரப்பளவு 130,058 சதுர கி.மீ. மக்கள் தொகை 62,110,839. இம்மாநிலம் பரப்பளவில் இந்தியாவில் பதினொன்றாவது இடத்தில் உள்ளது.

# பழனியின் பழைய சோறு

பழனியும் அவன் மனைவி பவளாயியும் புதுக்குடி என்ற ஊரில் வசித்து வந்தார்கள். பழனி ஏழை. கூலி வேலை செய்பவன். நிலம் எதுவும் அவனுக்குக் கிடையாது. அதனால் அன்றாட சாப்பாட்டிற்கே வழி தெரியாமல் அவர்கள் சிரமப்பட்டார்கள். நிலைமை கட்டுக்கு அடங்காமல் போகவே பவளாயி தன் கணவனிடம், ''இந்த ஊரில் நமக்கு வேண்டிய வருமானம் கிடைக்காது. அதனால் பக்கத்திலுள்ள நகரத்திற்குப் போய்



நிறையப் பணம் சம்பாதித்துக் கொண்டு வா!'' என்றாள்.

பழனியும், ''நாளைக் காலையிலேயே கிளம்புகிறேன். ஆனால் தினமும் நீ கொடுப்பது போல நீராகாரத்தில் பழைய சோற்றைக் கரைத்துக் கொடுக்காதே. நாளைக்கு ஒரு நாளைக்காவது பழைய சோற்றில் கட்டித் தயிரை பிசைந்து கட்டிக்கொடு. கூடவே ஒரு எலுமிச்சை ஊறுகாயையும் வை. அதை உச்சி வேளையில் சாப்பிட்டுவிட்டு நகரத்திற்குப் போய் வேலை தேடுகிறேன்'' என்றான்.

மறுநாள் பவளாயி பழனி கேட்டபடி தயிரை விட்டுப் பழைய சோற்றைப் பிசைந்து, ஊறுகாயையும் வைத்துக் கட்டிக் கொடுத்தாள். பழனியும் அந்த சோற்று மூட்டையை எடுத்துக் கொண்டு வீட்டைவிட்டு நகருக்குப் புறப்பட்டான். இரண்டு மணி நேரம் நடந்தபின் அவன் களைத்துப் போனதால் சாலையோரமாக இருந்த ஒரு பெரிய புளிய மரத்தின் கீழ் படுத்து அவன் தூங்கி விட்டான். அவனது தலைக்குப் பக்கத்தில் அவனது சோற்று மூட்டை இருந்தது.

அந்த மரத்தில் ஒரு பிரம்ம ராட்சஸன் இருந்து வந்தான். அவன் பழனி படுத்துக் குறட்டைவிட்டு தூங்குவதையும் அவனுக்குப் பக்கத்தில் ஒரு மூட்டை இருப்பதையும் பார்த்தான். அந்த மூட்டையில் என்ன இருக்கிறது என்று பார்க்க ஆவல் கொண்டான். எனவே அவன் மரத்திலிருந்து கீழே இறங்கி வந்து அந்த மூட்டையைக் கையில் எடுத்தான். தயிர்சாத வாசனை 'கமகம'வென்று வரவே அவன் அம்



மூட்டையைப் பிரித்துப் பார்த்தான். தயிர் சாதத்தையும் ஊறுகாயையும் பார்த்ததும் அவன் நாக்கில் நீர் ஊறியது. உடனே தயிர்சாதத்தை உருட்டி உருட்டி வாயில் போட்டுக் கொண்டு ஊறுகாயையும் சுவைத்தான். நொடியில் எல்லாம் காலியாகிவிட்டது.

அப்போது பிரம்ம ராட்சஸன் ''அடடா! எல்லாவற்றையும் சாப்பிட்டுவிட்டேனே. இவன் எழுந்தால் பசியோடு இருப்பானே. அதனால் இவனுக்கு நன்மை புரிகிறேன்'' என எண்ணி ஒரு சிறு வெண்கலப் பானையை மூட்டையில் வைத்துக் கட்டி அவன் தலையின் பக்கத்தில் வைத்துவிட்டுப் புளியமரத்தின் மீது ஏறிப்போய்விட்டான்.

சற்று நேரம் கழித்து பழனி எழுந்தான். சோம்பல் முறித்துவிட்டு அவன் சாப்பிட எண்ணி மூட்டையை எடுத்து அவிழ்த்தான். அதில் தயிர்



## பண்டிகைகளும் விழாக்களும்

பொங்கல் பண்டிகை உழவர்களின் நல்ல அறுவடைக்காகக் கொண்டா டப்படுவது. இது தை மாதத்தில் (ஜனவரியில்) நான்கு நாட்கள் கொண் டாடப்படுகிறது. சில இடங்களில் 'ஜல்லிக்கட்டு' எனப்படும் எருதை அடக்கும் வீரவிளையாட்டுகள் இச்சமயத்தில் நடைபெறுகின்றன.

சித்திரைத் திருவிழா சித்திரை மாதத்தில் (ஏப்ரலில்) மதுரை நகரில் நடைபெறுகிறது. அப்போது சுந்த ரேஸ்வரருக்கும் மீனாட்சி அம்மனுக் கும் திருக்கல்யாணம் நடத்தி விழா கொண்டாடப்படுகிறது.

சிதம்பரத்திலும் மாமல்லபுரத்திலும் நாட்டிய விழாக்கள் நடைபெறு கின்றன. மாமல்லபுரத்தில் பல்லவ மன்னர்களால் பதிமூன்றாவது நூற்றாண் டில் கற்பாறைகளில் செதுக்கப்பட்ட சிற்பங்களுக்கு முன் மேடை அமைத்து பரதநாட்டிய நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன.

சிதம்பரத்தில் நடனக் கடவுளான நடராஜரின் ஆலயத்தில் நடன விழா நடைபெறுகிறது. இந்த ஆலயத்தின் கல் தூண்களில் நூற்றெட்டுவித நடன நிலைகள் செதுக்கப்பட்டுள்ளன.

சாதத்திற்குப் பதிலாக வெங்கலப் பானை இருப்பதைக் கண்டு திடுக் கிட்டு அந்த வெண்கலப் பானை யைக் கையில் எடுத்துப் பார்த்தான். பிறகு அதைத் தன் விரலால் ஒரு தட்டு தட்டவே அதிலிருந்து 'டக்'கென்று ஒரு தேவதை வந்து அவன்முன் இலையைப் போட்டு விருந்து சாப் பாடாகப் பரிமாறிவிட்டு மறைந்தது.

பழனி ஆச்சரியத்துடன் விருந்து சாப்பாட்டைச் சாப்பிட்டுவிட்டு வெண்கலப் பானையை மூட்டை யாகக் கட்டிக் கொண்டு தன் ஊருக்கே திரும்பிச் சென்றான். தன் கணவன் திரும்பி வந்தது கண்டு பவளாயி கடு கடுப்பாக, "ஏன் நகரத்திற்குப் போய் வேலை செய்ய விருப்பம் இல்லையா?" என்று கேட்டாள்.

அவனோ வெண்கலப் பானையை எடுத்துக்காட்டி "இப்போது பார் அதி சயத்தை" என்று அதை ஒரு தட்டு தட்டினான். அடுத்த விநாடியே தேவதை தோன்றி அவர்களிருவருக் கும் வாழை இலைகளைப் போட்டுப்



பரிமாறியது. இருவரும் சாப்பிட்ட பின் அது மறைந்தது.

பவளாயி அடைந்த ஆச்சரியத் திற்கு அளவே இல்லை. அப்போது பழனி நடந்ததை எல்லாம் விவர மாகக் கூறி, ''இது கடவுள் நமக்கு அளித்த பரிசு. இதனால் நாம் மட்டும் பயனடையாமல் இவ்வூரிலுள்ள எல்லோருக்கும் தினமும் உண வளிக்க வேண்டும்'' என்றான்.

மறுநாள் ஊரிலுள்ள எல்லோரை யும் விருந்திற்கு அழைத்தான். ஊராரும் ''இந்த பழனியால் எப்படி எல்லோருக்கும் சாப்பாடு போட முடியும்? இவனே சோற்றுக்குத் தாளம் போடுபவனாயிற்றே. என்ன தான் இவன் போடப் போகிறான் என்று பார்ப்போமே'' என நினைத்து எல்லோரும் அவன் குடிசையின் முன் வரிசையாக உட்கார்ந்தார்கள்.

அப்போது பழனி வெண்கலப் பானையை எடுத்துத் தட்டவே, மறு நிமிடமே பல தேவதைகள் வந்து எல் லோருக்கும் இலைகளைப் போட்டு பச்சடிகள், கூட்டு, கறி, பருப்பு, நெய், சாம்பார், ரசம், அப்பளம், பாயசம், வடை, தயிர், ஊறுகாய், பலவித சாதங்கள் எனப் பரிமாறின. யாவரும் திருப்தியாகச் சாப்பிட்டு விட்டுப் பழனியையும் பவளாயி யையும் மனதார வாழ்த்திவிட்டுச் சென்றனர்.

இதையெல்லாம் அவ்வூர் வட்டிக் கடைக்காரன் வைரவன் கண்டு, பழனி யால் எப்படி இப்படி ஒரு விருந்து அளிக்க முடிந்தது என்று கேட்டான்.

## பட்டு நெசவு

தமிழ்நாடு அதன் பட்டாடை களுக்குப் பெயர் பெற்றது. காஞ்சி புரத்தில் நெய்யப்படும் பட்டாடை கள் திடமானதாயும், நீண்ட காலம் பயன்படுத்தக் கூடியதாயும் உள் ளன. இங்கு பட்டுப் புடவைகள் தங்க சரிகைக் கரைகளுடன் கண் கவர் விதமாய் நெய்யப்படுகின் றன. இங்கு இந்த நெசவுத் தொழில் நானூறு ஆண்டுகளுக்கு மேலாகத் தொடர்ந்து நடந்து கொண்டே வருகிறது.





பழனியும் தனக்கு புளிய மரத்தடியில் கிடைத்த வெண்கலப் பானையைப் பற்றிக் கூறினான். அதைக் கேட்ட வைரவன் ''நானும் பழைய சோறு கட்டி எடுத்துக் கொண்டு போய் மந்திரசக்தி வாய்ந்த பொருளை வாங்கி வருகிறேன்'' எனக் கூறிவிட்டுப் போனான்.

வைரவன் தன் வீட்டிலிருந்த ஊசப் பழைய சோற்றில் கொஞ்சம் மோர் விட்டுப் பிசைந்து ஒரு பச்சை மிள காயை வைத்து மூட்டையாகக் கட்டி எடுத்துக் கொண்டு பழனி குறிப்பிட்ட புளியமரத்திற்குச் சென்றான். அங்கு படுத்துத் தன் தலையின் பக்கத்தில் அவன் பழைய சோற்று மூட்டையை வைத்துவிட்டு தூங்குபவன் போலப் பாசாங்கு செய்தான்.

பிரம்ம ராட்சஸன் புளிய மரத்திலி

## ஆலயங்கள்

தமிழ்நாடு ஆலயங்களுக்குப் புகழ் பெற்றது. தஞ்சை பிரகதீஸ்வரர் கோயில் அதன் சிற்பக் கலைக்குப் பெயர் பெற்றது.

இதை முதலாவது ராஜராஜ சோழர் கட்டினார் (கி.பி. 985– 1013). இதன் மேல் கோபுரம் ஒரே பெரிய கல்லால் செதுக்கப்பட்டு அதன் நிழல் தரையில் எங்கும் விழாதபடி நிர்மாணிக்கப்பட்டுள்ளது.

மதுரையின் மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயம் தமிழ்நாட்டின் மற்றொரு பெரிய கோயில். இதைப் பார்க்க தினமும் சுற்றுலாப் பயணிகள் வந்து கொண்டிருக்கிறார்கள்.

காஞ்சிபுர ஏகாம்பரேஸ்வரர்



கோயிலுக்கும், ஸ்ரீரங்கம் ரங்கநாதர் ஆலயத்திற்கும் தினமும் பக்தர்கள் கூட்டம் வந்து கொண்டே இருக் கிறது. சிதம்பரம், இராமேசுவரம், திருவண்ணாமலை ஆகிய இடங் களின் ஆலயங்களும் புகழ் பெற்றவை.

ருந்து இறங்கி வந்து வைரவனருகே இருந்த சோற்று மூட்டையை எடுத்தான். அது ஒரே நாற்றம் அடிக்கவே, அந்த சோற்றை எடுத்துத் தூர எறிந்தான். அப்போது வைரவன் கண்ணைத் திறந்து பார்த்துவிட்டு மீண்டும் மூடிக் கொண்டதை பிரம்ம ராட்சஸன் கவனித்துவிட்டான். அவன் ஏமாற்றுகிறான் எனத் தெரிந்து கொண்ட பிரம்மராட்சஸன் அவனுக்குப் பாடம் புகட்ட எண்ணி, ஒரு சிறு மூங்கில் கொட்டுக் கூடையை வைத்து மூட்டையாகக் கட்டி அவனது தலைப் பக்கம் வைத்துவிட்டுப் போய்விட்டான்.

பிரம்ம ராட்சஸன் போனதும் வைரவன் எழுந்து மூட்டையை எடுத்துக் கொண்டு தன் ஊருக்கு வந்தான். ஊரார் எல்லோரையும் அன்றிரவே விருந்திற்கு அழைத்தான். எல்லோரும் வந்து உட்காரவே வைர வன் மூட்டையை அவிழ்த்து மூங்கில் கொட்டுக் கூடையைப் பார்த்து, ''கூடையே! எல்லோருக்கும் விருந்து சாப்பாடு போடு'' என்றான். கூடையிலிருந்து 'மளமள' வென்று ஆட்கள் வெளிவந்து அங்கிருந்த ஒவ்வொருவரின் முன்னால் உட்கார்ந்து அவர்களது தலைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு மொட்டை அடித்துவிட்டுப் போய் விட்டார்கள்.

வைரவன் அவமானத்தால் தலை காட்ட முடியாமல் அப்போதே அந்த ஊரைவிட்டு ஓடிப் போய்விட்டான்!



## சுற்றுலா இடங்கள்

தமிழ்நாட்டில் ஆலயங்கள் உள்ள ஊர்களைத் தவிர இன்னும் பல ஊர்கள் பார்க்கத் தக்கவை. சென்னையின் மெரினா கடற்கரை உலகிலேயே இரண்டாவது பெரிய கடற்கரையாகும்.

தமிழ்நாட்டிற்கும் கர்நாடகத்திற்குமிடையே எல்லையில் ஒகேனக்கல் என்ற நீர்வீழ்ச்சி சுற்றுலாப் பயணிகளைக் கவர்கிறது. இங்கு காவிரி பிளந்து ஒருபுறம் ஆறாகவும், மறுபுறம் நீர்வீழ்ச்சியாகவும் அமைந்துள்ளது. காவிரி மலைகளிலும் காடுகளிலும் பாய்ந்து பல மூலிகைகளைத் தன்னுள் கரைத்துக் கொண்டு வருவதால் இதில் குளிப்பது உடலுக்கு நல்லது என மக்கள் கருதுகிறார்கள்.

# நம் இந்தியா

## வினாக்கள்

மேலும் ஒரு குடியரசு நாள் 2002 ஜனவரியில் 51வதாக வரப்போகிறது. இந்திய சுதந்திர தன்னாட்சி கொண்ட சோஷலிஸக் குடியரசு என்று அறிவிக்கப்பட்டதைக் குறிக்க இது கொண்டாடப்படுகிறது. அன்னியர் ஆட்சியிலிருந்து விடுபட பல ஆண்டுகள் நடந்த சுதந்திரப் போராட்டத்திற்குப் பிறகு நம் நாடு இந்த நிலையை அடைந்தது. இந்த மாதத்து வினாக்கள் சுதந்திரப் போராட்டம் பற்றியவை.

1. 'தி இண்டியன் ஸ்ட்ரகிள்' என்ற நூலின் ஆசிரியர் யார்?
2. சத்தியாக்கிரகம் என்ற சொல்லை முதலில் அளித்தவர் யார்?
3. ஜவஹர்லால் நேரு காந்திஜீயை முதன் முதலாக எங்கு எப்போது சந்தித்தார்?
4. லால், பால், பால் என்று மூன்று தேசியத்தலைவர்கள் அழைக்கப்பட்டனர். அவர்கள் யார்?
5. வங்காளம் எப்போது மேற்கு வங்காளம், கிழக்கு வங்காளம் எனப் பிரிக்கப்பட்டது?
6. கிழக்கிந்தியக் கம்பெனி ஆங்கில அரசாங்கத்திற்கு நம் நாட்டின் ஆட்சியை எப்போது ஒப்படைத்தது?
7. இந்தியாவிற்கு சுதந்திரம் வேண்டும் என்ற தீர்மானத்தை இந்திய தேசிய காங்கிரஸ் எங்கு எப்போது நிறைவேற்றியது?
8. சைமன் கமிஷன் எப்போது எந்த நோக்கத்துடன் இந்தியாவிற்கு வந்தது?
9. இடைகால அரசாங்கம் எப்போது அமைக்கப்பட்டது?
10. 'சுதந்திரம் எனது பிறப்புரிமை. அதை நான் அடைந்தே தீருவேன்' - இதைக் கூறியவர் யார்?

*(விடைகள் அடுத்த மாதம்)*

## டிசம்பர் மாத வினாக்களின் விடைகள்

1. மே 11, 2000. குழந்தைக்கு ஆஸ்தா என்று பெயரிடப்பட்டது.
2. காஞ்சன்ஜங்கா - 8598மீ (20,208 அடி)
3. சிந்து நதியும் அதன் கிளை நதிகளான ஜேலம், சீனாப், ரபி, சட்லெஜ் ஆகியவையும்
4. உத்தராஞ்சல் - டேராடூன்; சத்தீஸ்கட் - ராய்பூர், ஜார்கண்ட் - ராஞ்சி
5. தமிழ்நாடு - திருமதி ஜானகிராமச்சந்திரன், செல்வி ஜெயலலிதா.

ஒரு உயரிய நாகரீகத்தின் நிகழ்ச்சிகள்.
பரம்பரை பரம்பரையாக உண்மையைக் காண ஆய்வு

# 24. காளிதாசரின் கவிதை நயம்



சேகர் மிகவும் உற்சாகத்துடன் ''தாத்தா! நாங்கள் எங்கள் பள்ளியில் ஆண்டு விழாவின் போது காளிதாசரின் நாடகம் ஒன்றை நடித்துக் காட்டப்போகிறோம். ஒத்திகை பார்க்க நாளைக்கு வரச் சொல்லி இருக்கிறார்கள். எங்கள் ஆசிரியர் வந்து யார் யார் என்ன பாத்திரம் ஏற்று நடிக்க வேண்டும் என்று கூறுவார்'' என மகிழ்ச்சி ததும்பக் கூறினான்.

சோமநாதரும் ''ஓ! காளிதாசரின் நாடகமா? அப்படியானால் அது அபிஞான சாகுந்தலம் என்பதாகத் தான் இருக்கும்'' எனவே, சேகர் ஆச்சரியத்துடன் ''ஆமாம் அதே தான். ஆனால் இது எப்படி உங்களுக்குத் தெரிந்தது?'' என்று கேட்டான். சோமநாதரும் சிரித்தவாறே ''இது என்ன பிரமாதம்? காளிதாசரின் படைப்புகளில் மிகமிகப் புகழ்பெற்ற நாடகம் சாகுந்தலமே. விக்கிரம - ஊர்வசீயம், மாளவிகா - அக்னிமித்திரம் போன்ற அவரது மற்ற நாடகங்களை மேடையில் நடித்துக் காட்டுவது சிரமமே. மேலும் அவற்றை சமஸ்கிருத மொழியில் நடித்துக் காட்டினாலே ரசிக்கத் தக்கதாய் இருக்கும். நீங்கள் சம்ஸ்கிருதத்திலா அந்த நாடகத்தை நடித்துக்



காட்டப் போகிறீர்கள்?'' என்று கேட்டார். சேகரும் ''இல்லை. சம்ஸ்கிருதத்தில் உரையாடலைக்கூற நாங்கள் சிரமப்படுவோம்.'' எனவே சோமநாதரும் ''ஒரு சிரமமும் இல்லை. உனக்கு என்ன வேஷம்?'' என்று கேட்டார். சேகரும் ''இன்னமும் முடிவாகவில்லை தாத்தா நீங்கள் சாகுந்தலத்தின் கதையைக் கூறுகிறீர்களா? அது எனக்கு மிகவும் உதவும்'' என்றான்.

சோமநாதரும் ''உள்ளே போய் முகம் கழுவி சிற்றுண்டி சாப்பிட்டு வா பிறகு அக்கதையைச் சொல்கிறேன்'' என்றார். சேகர் உள்ளே போய் ஐந்தே நிமிடத்தில் திரும்பி வந்து விட்டான். சோமநாதரும் ''அதற்குள் சாப்பிட்டாகி விட்டதா? சரி. சாகுந்தலத்தின் கதையைக் கூறுகிறேன்.'' என்று கூறிக் கதையைச் சொல்ல ஆரம்பித்தார்.

ஹஸ்தினாபுர மன்னனான துஷ்யந்தன் வேட்டையாடக் காட்டிற்குச் சென்றான். அவன் ஒரு மானைத் துரத்திக் கொண்டு கண்வ முனிவரின் ஆசிரமம் இருக்கும் பகுதியை அடைந்தான். அங்கு அம்முனிவரின் வளர்ப்பு மகள் சகுந்தலை இருந்தாள். அவள் விசுவாமித்திர முனிவருக்கும் தெய்வலோக அழகி மேனகைக்கும் பிறந்தவள். ஆசிரமத்தோட்டத்தில் இருந்த சகுந்தலையை ஒரு வண்டு சுற்றிச் சுற்றி வந்து பயமுறுத்தியது. அவளுடைய தோழி பிரியம்வதை குறும்புக்காரி. அவள் கேலியாக ''துஷ்யந்த மன்னர் இந்த நாட்டை ஆண்டு கொண்டிருக்கையில் ஒரு வண்டு ஒரு பெண்ணை பயமுறுத்துவதா? அதற்குத்தான் என்ன துணிச்சல்!'' என்று கூறிச் சிரித்தாள்.

அப்போது சகுந்தலை ''அப்பா வேறு எங்கோ போயிருக்கிறார். இப்போது அந்த மன்னர் வந்து தானே என்னைக் காப்பாற்ற வேண்டும்'' என்றாள். அதே சமயம் துஷ்யந்தன் வந்து வண்டை விரட்டினான். கண்வர் ஆசிரமத்தில் இல்லாததால் சகுந்தலை மன்னனை ஆசிரமத்துள் அழைத்துப்போய் உபசரித்தாள். ஆசிரமத்தில் தங்கிய துஷ்யந்தன் சகுந்தலையை மனதார நேசித்தான். சகுந்தலையும் அவனை விரும்பினாள். இருவரும் காந்தர்வவிவாகம் செய்து கொண்டார்கள்.

துஷ்யந்தன் கண்வரின் ஆசிரமத்திலிருந்து தலைநகருக்கு வந்து விட்



டான். சகுந்தலையைப் பிரியுமுன் அவன் தன் மோதிரத்தை அவளது விரலில் அணிவித்தான். கண்வர் ஆசிரமத்தில் அப்போது இல்லாததால் அவன் சகுந்தலையைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு போக முடியவில்லை.

சகுந்தலை ஒரு நாள் துஷ்யந்தனைப் பற்றி யோசித்தவாறே தன்னையே மறந்து விட்டாள். அப்போது முன் கோபக்காரரான துர்வாச முனிவர் அந்த ஆசிரமத்திற்கு வந்தார். அவர் வந்ததை சகுந்தலை கவனிக்கவில்லை. தன்னை வரவேற்று உபசரிக்கவில்லை எனச் சகுந்தலை மீது கோபம் கொண்டு அவள் யாரை நினைத்துக் கொண்டிருக்கிறாளோ அவன் அவளை மறந்து விடுவான் என்று சபித்து விட்டார். சகுந்தலைக்கு இது தெரியவில்லை. ஆனால் அவளது தோழி பிரியம்வதை முனிவர் சாபமிட்டதைக் கேட்டு அவள் ஓடி வந்து முனிவரை வணங்கி சகுந்தலையை மன்னித்து சாபவிமோசனம் கூறுமாறு வேண்டினாள். அவரும் துஷ்யந்தன் சகுந்தலைக்குக் கொடுத்த ஏதாவது ஒரு பொருளைக் காட்டினால் அவன் அவளை அடையாளம் கண்டு கொள்வான்'' எனக் கூறி விட்டுச் சென்றார்.

கொஞ்ச நாட்களுக்குப் பின் கண்வர் தம் ஆசிரமத்திற்குத் திரும்பி வந்தார். அப்போது சகுந்தலைக்கும் துஷ்யந்தனுக்கும் நடந்த காந்தர்வ விவாகத்தை அவர் அறிந்து கொண்டார். கர்ப்பிணியான சகுந்தலையை துஷ்யந்தனிடம் அனுப்பினார். போகும் வழியில் சகுந்தலை ஒரு குளத்தில் நீர் குடித்துக் கொண்டிருந்த போது துஷ்யந்தன் அவள் விரலில் அணிவித்த மோதிரம் நழுவி குளத்துள் விழுந்து

விட்டது. அதை அவள் கவனிக்க வில்லை. சகுந்தலை துஷ்யந்தனின் சபைக் குச் சென்ற போது அவனால் அவளை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. அதற்குக் காரணம் துர்வாசரின் சாபமே.

சகுந்தலை தன்னைப் பற்றி அவனுக்கு நினைவூட்ட அவன் கொடுத்த மோதிரத்தை காட்ட நினைத்துத் தன் கை விரலைப் பார்த்தாள். ஆனால் அது விரலில் இல்லாதது கண்டு அவள் திகைத்து நின்றாள்.

துஷ்யந்தன் அவளை ஏற்க மறுக்கவே அவள் அம்மா என அலறினாள். அப்போது தேவலோகத்திலிருந்து அவளது தாய் மேனகை வந்து அவளைத் தன்னுடன் அழைத்துச் சென்றாள். ஒரு நாள் ஒரு மீனவன் தனக்கு ராஜ மோதிரம் கிடைத்ததெனக் கூறி அதை துஷ்யந்தனிடம் கொடுக்கவே அப்போது அவனுக்குச் சகுந்தலை பற்றிய நினைவு வந்தது. அவன் அவளை எண்ணி உருகலானான்.

ஒரு நாள் அவன் கஸ்யபமுனிவரின் ஆசிரமத்திற்குள் சென்ற போது அங்கு ஒரு சிறுவன் சற்றும் பயப்படாமல் ஒரு சிங்கக்குட்டியுடன் விளையாடிக்கொண்டிருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டான். அச்சிறுவன் அவனுக்கும் சகுந்தலைக்கும் பிறந்தவன். அவனால் சகுந்தலையை துஷ்யந்தன் அடைந்தான். அதன் பிறகு அவர்கள் சுகமாக வாழ்ந்தார்கள். அச்சிறுவன் பரதன் பெரியவனாகி மன்னனாகி நாட்டை ஆண்டான். அதனால் அவன் பெயரில் நாடு 'பாரதவர்ஷம்' என்ற பெயரை பெற்றது.

சோமநாதர் சாகுந்தலத்தின் கதையை இவ்வாறு கூறி முடித்து ''காளிதாசரின் இந்த நாடகம் அதன் இலக்கிய நயத்திற்காக உலகம் முழுவதிலும் பாராட்டப்படுகிறது'' என்றார்.





# தேவி பாகவதக் கதைகள்

முன்னொரு காலத்தில் துவஷ்டிரப் பிரஜாபதி என்பவர் அரும்தவம் செய்து அரியசக்தி பெற்றார். அவர் இந்திரன் மீது பொறாமை கொண்டு மூன்று தலைகள் கொண்ட விசுவரூபன் என்பவனைச் சிருஷ்டித்தார். அவன் வளர்ந்து பெரியவனானதும் ஒரு தலையால் வேதங்களைக் கூறியும், இரண்டாவது தலையால் சாஸ்திரங்களை கேட்டுக் கொண்டும் மூன்றாவது தலையால் உலகில் நடப்பதை எல்லாம் பார்த்துக் கொண்டும் வந்தான். அவன் இந்த மூன்று செயல்களையும் ஒரே சமயத்தில் செய்து வந்ததால் முனிவர்கள் அவனைப் புகழ்ந்து பாராட்டினார்கள்.

இந்த விசுவரூபன் தீயின் நடுவே நின்றும், வெயில், மழை, குளிர், பனி என எதையும் லட்சியம் செய்யாமலும் பிரம்மாவைக் குறித்துத்தவம் செய்தான். அந்தத் தவத்தைக் கலைக்க இந்திரன் அப்சரக் கன்னிப் பெண்களை அனுப்பினான். ஆனால் அவர்களால் விசுவரூபனின் தவத்தைக் கெடுக்க முடியவில்லை. இதனால் ஆத்திரம் கொண்ட இந்திரன் விசுவரூபனைக் கொல்லத் தீர்மானித்தான். இது எவ்வளவு பெரிய பாவம் என்று அவன் கொஞ்சமும் எண்ணிப் பார்க்கவில்லை. அவன் விசுவரூபன் தவம் செய்து கொண்டிருந்த இடத்தை அடைந்து தன் வஜ்ஜிராயுதத்தால் அவனைக் கொன்றான்.

தன் மகன் விசுவரூபனை இந்திரன் கொன்று விட்டதை அறிந்த துவஷ்டிரப் பிரஜாபதி அக்கினியை வளர்த்து

4-விருத்திரனின் கதை



அதிலிருந்து ஒளிப்பிழம்பாயுள்ள விருத்திரன் என்பவனை வரச் செய்தார். அவனிடம் ''உன் பெயர் விருத்திரன். எல்லா சாஸ்திரங்களும் உனக்குத் தெரியும். மூன்று தலைகள் கொண்ட உன் அண்ணன் விசுவரூபனை இந்திரன் கொன்று விட்டான். அந்த இந்திரனைக் கொல்லவே உன்னை அக்கினியிலிருந்த பிறந்து வரச் செய்தேன். நீ இந்திரனைப் பழிக்குப்பழி வாங்க வேண்டும். அவனை ஒழிக்க வேண்டும்.'' என்றார்.

விருத்திரனும் விதவிதமான ஆயுதங்களை எடுத்துக் கொண்டு ரதத்தில் அமர்ந்து இந்திரனைத் தாக்கச் சென்றான்.

விருத்திரன் இந்திரனைத் தாக்க வருகிறான் என்று கேட்டதுமே தேவலோகத்திலிருந்த முனிவர்களும் யட்சர்களும் எங்கோ ஓடத் தொடங்கவே இந்திரன் அவர்களைக் கூப்பிட்டு தைரியமூட்டி போருக்கான ஆயத்தங்களைச் செய்யும்படிக் கூறினான். அவன் பிரகஸ்பதியையும் தன் யானை மீது ஏற்றிக் கொண்டு விருத்திரனுடன் போர் புரியச் சென்றான். அவனுடன் ஆயுதங்களை எடுத்துக் கொண்டு தேவர்களும் சென்றார்கள். விருத்திரனுடன் அவர்கள் பல வருடங்கள் போர் புரிந்தும் பயனேற்படவில்லை.

இதனால் சகல உலகங்களுக்கும் பெரும் இழப்பே ஏற்பட்டது. வருணன் தோற்று ஓடவே மழை இல்லாது போயிற்று. அக்கினி தோற்கவே நெருப்பும் இல்லாது, வாயு தோற்றதால் காற்றில்லாமலும் போயிற்று. இதனால் இந்திரனின் சக்தி எல்லாம் போய்த் தோற்றுப்போனான். விருத்திரன் வெற்றி மாலை சூடி தன் தந்தையிடம் போய் ''நான் இந்திரனை வென்று விட்டேன். இப்போது தேவலோகம் என் ஆட்சியின் கீழ் வந்து விட்டது'' என்றான்.

துவிஷ்டிரரும் மகனைப் பாராட்டி ''மகனே! நீ உன் பராக்கிமத்தைக் காட்டி என்னைத் தலை நிமிர வைத்து விட்டாய். இனி நீ என்ன செய்ய வேண்டும் தெரியுமா? இந்திரனை நீ நம்பி விடக் கூடாது. அதனால் நீ பிரம்மாவைக் குறித்துத்தவம் செய். நீ சாகா வரம் பெற்று அந்த இந்திரனைக் கொன்று விடு. என் மூத்த மகனைக் கொன்றவனுக்கு இது தான் சரியான தண்டனை'' என்றார்.

விருத்திரனும் தன் தந்தையிடம்

விடை பெற்றுக் கொண்டு கந்தமா தன பர்வத்தை அடைந்தான். அங்கு ஓடும் நதியில் குளித்து விட்டு அமர்ந்து கடுந்தவம் புரியலானான். நீண்ட காலம் அவன் புரிந்த தவத்தைக் கண்டு மகிழ்ந்து பிரம்மா அவன் முன் தோன்றி ''நீ தவம் செய்தது போதும் உனக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்டார்.

விருத்திரனும் பிரம்ம தேவனை வணங்கி ''தேவா! நான் இந்திரனை வென்று அவனது பதவியைப் பெற் றேன். நான் எந்த உலோகத்தாலோ மரத்தாலோ உலர்ந்த அல்லது உலராது இருக்கும் மூங்கிலாலோ வேறு எந்த வித ஆயுதத்தாலோ நான் மரணத்தை அடையக் கூடாது. போர் மூண்டால் என் சக்தி அதிகரிக்க வேண்டும். இது தான் நான் தங்களிடம் கோருவது'' என்றான்.

பிரம்மாவும் அவன் கேட்ட வற்றை எல்லாம் கொடுத்து விட்டு மறைந்தார்.

விருத்திரன் அங்கிருந்து புறப் பட்டுச் சென்று தன் தந்தையைக் கண்டு தான் பெற்ற வரங்களைக் கூறி னான். அது கேட்டு துவிஷ்டிரர் மகிழ்ந்து ''மகனே! உன் அண்ண னைக் கொன்ற அந்த இந்திரனை நீ வெகு சுலபமாகக் கொன்று விட முடியும்'' என்றார்.

விருத்திரனும் தன் தந்தை கூறிய படி இந்திரனைக் கொல்ல பெரிய படையுடன் கிளம்பினான். இந்திர னும் அவனை எதிர்த்துப் போராடத் தயாரானான்.



அவர்களிடையே கடும் போர் நீண்ட காலத்திற்கு நடந்தது. முடிவில் இந்திரன் படு தோல்வி அடைந்து யாவற்றையும் இழந்து எங்கோ ஓடிப் போனான். விருத்திரன் அமராவதியில் ஆட்சி செலுத்தி னான். இதைக் கண்டு மகிழ்ந்த துவிஷ் டிரர் அவனைப் பாராட்டினார். தேவர் களோ யாகங்களின் போது அவிர் பாகம் கூட வாங்கிக் கொள்ள முடியா மல் போனார்கள். அதனால் அவர்கள் எல்லோரும் சிவபெருமானைக் கண்டு தம்மைக் காப்பாற்றும்படி வேண்டினார்கள்.

அவரும் எப்போதும் கூறுவது போல அப்போதும் ''நாம் பிரம்மா வைக் கூட்டிக் கொண்டு போய் விஷ்ணுவைப் பார்ப்போம். அவர் விருத்திரனை ஒழிப்பார்'' என்றார்.

அதன்படியே தேவர்கள் பிரம்



மாவை அழைத்துக் கொண்டு சிவ பெருமானுடன் வைகுண்ட லோகத் திற்குச் சென்று விஷ்ணுவிடம் விருத் திரன் செய்யும் அட்டகாசங்களைக் கூறினார்கள்.

அவரும் ''விருத்திரன் பற்றி நானும் அறிவேன். விருத்திரனைக் கொல்வதற்கு ஒரு வழி செய்கிறேன். நீங்கள் இந்திரனை விருத்திரனுடன் நட்பு கொள்ளும்படிச் செய்யுங்கள். நான் இந்திரனின் வஜ்ஜிராயுதத்தில் மறைந்திருந்து உங்களுக்கு உதவி புரிகிறேன். எல்லோர் விருப்பங் களையும் நிறைவேற்றி வைக்கும் அந்த தேவி பராசக்தியைப் பிரார்த்தி யுங்கள். அவள் கண்டிப்பாக உதவி புரிவாள். அவளது மாயையில் சிக்கி அவன் இந்திரனால் கொல்லப்படு வான். நீங்கள் எல்லோரும் பராசக்தி யுடன் சென்று விருத்திரனைக் கொல்ல உதவுங்கள்'' என்றார். தேவர் கள் எல்லோரும் மேரு மலைக்குப் போய் தேவியைப் பிரார்த்தித்தார்கள். தேவியிடம் ''அம்மா! நீங்கள் மகிஷா சுரனையும் சம்பராசுரனையும் கொன் றவர்கள். இந்த விருத்திரனும் உம் பக்தர்களான எங்களை அவர்களைப் போலவே துன்புறுத்துகிறான்'' என்று வேண்டினார்கள்.

அது கேட்டு தேவி பூரித்துப் போய் ஆயுதங்களைத் தன் நான்கு கைகளில் ஏந்தி அவர்கள் முன் தோன்றி அவர்க ளுக்கு உதவுவதாகக் கூறி மறைந்தாள்.

தேவர்களும் மகிழ்ந்து போய் அங்கிருந்து கிளம்பினார்கள். அவர் கள் போய் இந்திரனைக் கண்டு அவ னிடம் விருத்திரனுடன் நட்பு கொள் ளச் சொன்னார்கள். அது போல முனி வர்களும் சிநேகிதனாக்கிக் கொள் ளும்படிக் கூறினார்கள். விருத்திரனும் ''உங்கள் மீது நான் மிகவும் கௌரவம் வைத்திருக்கிறேன். நீங்கள் சொல்வது போல அந்த இந்திரனுடன் நட்புறவு கொள்ளவும் தயாராக இருக்கிறேன். ஆனால் அந்தக் கொலை பாதகனான இந்திரனை எப்படி நம்ப முடியும்?'' என்று கேட்டான்.

அதைக் கேட்ட முனிவர்கள் ''அப்படி ஏதாவது இந்திரன் கெட்ட எண்ணம் கொண்டு ஏதாவது செய் தால் அந்தப் பாவம் அவனுக்கே சேரும். அவன் விசுவரூபனைக் கொன்ற பாவம் அவனை விட்டு அக லாது. இப்போது உன்னிடம் வேண் டிக் கொள்வது எல்லோருடைய நன்மைக்காகத்தான். எனவே அதற்

காக நீங்களிருவரும் நண்பர்களாகி விட வேண்டும்'' என்றார்கள்.

விருத்திரனும் ''நான் இந்திரனை நண்பனாக்கிக் கொள்கிறேன். அவனால் எந்த உலோகத்தாலோ, மரத்தாலோ வேறு எந்தப் பொருளாலோ என்னைக் கொல்லவும் முடியாது'' என்றான் கர்வத்தோடு.

முனிவர்களும் அங்கிருந்து சென்று இந்திரனைக் கண்டு அவனுடைய நண்பனாக விருத்திரன் ஆகப் போவதாகக் கூறினார்கள்.

இதன் பிறகு இந்திரனும் விருத்திரனும் அக்கினி சாட்சியாக நண்பர்களானார்கள். இருவரும் ஒன்றாகப் பல இடங்களுக்குச் சென்றார்கள். விருத்திரன் இந்திரனின் நட்பால் திருப்தி அடைந்தான். ஆனால் இந்திரனோ விருத்திரனை எப்போது கொல்லலாம் என்று தக்க சமயத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

ஒரு நாள் இந்திரனும் விருத்திரனும் கடற்கரையோரமாக நடந்து கொண்டிருந்தார்கள். அது மாலை நேரம். அவர்களுடன் வேறு யாரும் இருக்கவில்லை. இது தான் விருத்திரனைக் கொல்ல சரியான சமயம் என்று இந்திரன் நினைத்தான். அவன் விஷ்ணுவைப் பிரார்த்திக்கவே அவரும் யாருக்கும் தெரியாமல் வந்து இந்திரனின் வஜ்ஜிராயுதத்தில் புகுந்தார். இந்திரன் கடலில் நுரையைப் பார்த்தான். அது எவ்வித ஆயுதமும் இல்லை. எனவே இந்திரன் தேவியை துதித்து கடல் நுரைக்குள் புகச் சொன்னான். தேவி புகுந்த கடல் நுரையால் இந்திரன் வஜ்ஜிராயுதத்தை மறைத்து அதை விருத்திரன் மீது எறிந்தான்.

அந்த அடி அவனை பலமாகத் தாக்கவே இடியால் தாக்கப்பட்டவன் போல விருத்திரன் கீழே விழுந்து இறந்து போனான்.

விருத்திரன் இறந்ததால் இந்திரன் தைரியமாக அமராவதிக்குப் போய் அரியாசனத்தில் அமர்ந்து ஆட்சி புரியலானான். தேவர்களும் முனிவர்களும் முன் போல மகிழ்ச்சியுடன் தேவலோகத்தில் இருந்தனர். அவர்கள் பராசக்திக்கு ரத்தின மயமான ஆலயம் கட்டி அதில் அவளை இருக்கச் சொல்லி தினமும் வழிபட்டு வரலானார்கள். **(நிறைவுற்றது)**





# அச்சம் தவிர்

பரிபூர்ணானந்தர் என்ற யோகி தம் சீடனுடன் ஊர் ஊராகச் சென்று கொண்டிருந்தார். ஒரு நாள், இருட்டும் வேளைக்கு அவர்கள் அம்மாபுரம் என்ற ஊரை அடைந்து ஒரு சத்திரத்தில் தங்கினார்கள். அப்போது திடீரென அங்கு கூச்சலும் குழப்பமுமாக இருக்கவே, அவர்கள் அதற்கு என்ன காரணம் என்று பார்த்தார்கள். ஒரு முரடன், பனிரெண்டு வயதுச் சிறுவன் ஒருவனைப் பிடித்து கொண்டு சாட்டையால் 'பளார்' பளாரென்று அடித்துக் கொண்டிருந்தான். அதைப் பார்த்த குருவின் மனமும் சீடனின் மனமும் குமுறியது.

விஷயம் என்ன என்று அவர்கள் விசாரித்தார்கள். அச்சிறுவன் அந்த முரடனின் வீட்டில் வேலையாளாக இருந்தவனாம். அவனை அந்த முரடன் பல விதத்திலும் துன்புறுத்தி வேலை வாங்கி வந்ததால், அவன் அங்கிருந்து தப்பி ஓடிவந்து விட்டான். ஆனால் அவனுக்கென உறவினரோ, நண்பனோ யாரும் இல்லாததால், அந்த சத்திரத்தில் வந்து மறைந்திருந்தான். ஆனால் முரடன் அவனைத் தேடிக் கொண்டு வந்து அவனைச் சத்திரத்தில் பிடித்துவிட்டான்.

அச்சிறுவன் தன் வீட்டிலிருந்து விலையுயர்ந்த முத்து மாலையைத் திருடிவிட்டான் என்று அந்த முரடன் குற்றம் சாட்டி, அவனை அடித்தான். சிறுவனோ அவன் கூறுவது பொய் என்றும், தன்னைக் கட்டாயப்படுத்தி வேலை செய்விக்கவே அவன் அப்படிக் குற்றம் சாட்டுவதாகவும் அங்குள்ளவர்களிடம் கூறினான். ஆனால் அவர்களில் யாருமே அந்த முரடனை எதிர்த்துத் தடுக்க முயலவில்லை.

இந்த அநியாயத்தைக் காணச் சகியாமல் குருவும் சீடனும் திகைத்து நின்ற போது, அச்சிறுவன் கடா மீசையுடனுள்ள கந்தப்பன் என்ற பயில்வானின் கால்களில் விழுந்து தன்னைக்

மோகன் சங்கர்

காப்பாற்றும்படி வேண்டினான். அவனோ, ''உன்னை விடுவிப்பது என் வேலையல்ல. போய்க் காவலதிகாரியிடம் புகார் செய்'' என்று அலட்சியமாகக் கூறினான்.

இதைப் பார்த்த கோலப்பன் என்ற ஒல்லியானவன் ஆவேசத்தோடு போய் முரடனிடம் ''உண்மையிலே உன் முத்து மாலை களவு போயிருந்தால் நீ காவலதிகாரியிடம் புகார் செய். நீயாக இப்படி அடித்துக் கொடுமைப்படுத்தக் கூடாது'' என்றான்.

முரடனோ கோலப்பனை முறைத்துப் பார்த்துவிட்டு, ''நீ யாரடா இதைச் சொல்ல? வீட்டில் சொல்லிவிட்டு வந்துவிட்டாயா?'' என்று கூறி அவனைப் பலமாகத் தள்ளினான்.

கோலப்பன் நிலை தடுமாறி கூட்டத்திலிருந்த ஒருவன் மீது விழுந்தான்.

அப்போதும் கோலப்பன் கூட்டத்தவரிடம் அச்சிறுவனை முரடனிடமிருந்து காப்பாற்றும்படிக் கேட்டுப் பார்த்தான். ஆனால் யாருமே அவன் சொன்னதைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை. அப்போது பரிபூர்ணானந்தர் அச்சத்திரத்து எஜமானனிடம் பேசிக் காவலதிகாரியை வரவழைத்து முரடனையும், அடிபட்டு முனகிக் கொண்டிருக்கும் சிறுவனையும் அவரிடம் ஒப்படைத்தார். அதன்பின் மறுநாள் குருவும் சீடனும் அங்கிருந்து சென்றார்கள்.

வழியில் சீடன் பரிபூர்ணானந்தரிடம் ''குருவே நேற்றிரவு சத்திரத்தில் நடந்த சம்பவம் என்னை உலுக்கிவிட்டது. ஒரு முரடன் ஒரு சிறுவனை மாட்டை அடிப்பது போல அடிக்க, அங்கிருந்த எல்லோரும் பேசாமல் பார்த்துக் கொண்டிருந்தார்களே, இது என்ன அநியாயம்'' என்று கேட்டான்.



குருவும் ''நீ முதல் தடவையாக இப்படி ஒரு சம்பவத்தைப் பார்த்த தால் வேதனைப்படுகிறாய். ஒரு மனி தன் நடக்கும் நிகழ்ச்சியை, எப்போது, எப்படி சமாளிக்கிறான் என்பதைக் கொண்டு அவனது இயல்பைக் கூறி விடலாம். மனிதனின் முதல் எதிரி அவன் மனதில் எழும் பயமே. இதற்கு முக்கிய காரணம் அவனு டைய குறுகிய நோக்கும், ஒற்றுமை யுடன் வசிக்காமல் போவதும் தான். அந்த கந்தப்பனிடம் முரடனை அடக்கி அச்சிறுவனை அவனிட மிருந்து விடுவிக்கப் போதிய பலமும் இருந்தது. ஆனால் துணிச்சலாக முரடனை எதிர்க்கவில்லை. கோலப் பன் உடலில் பலம் இல்லாது போனா லும் பயமில்லாமல் துணிச்சலுடன் முரடனை எதிர்த்தான். அவனைப் போல அங்கிருந்தவர்களும் ஒன்று சேர்ந்திருந்தால் அந்த முரடனை அடக்கி அச்சிறுவனை விடுவித்தி ருக்கலாம். ஆனால் அனைவரும் பயத்தால் எதுவும் செய்யவில்லை'' என்றார்.

''இதற்கு ஒரு வழியும் இல் லையா?'' என்று சீடன் கேட்கவே பரி பூர்ணானந்தரும், ''இருக்கிறது. உனக்கு இதை விளக்க ஒரு சம்பவத் தைக் கூறுகிறேன். ஒரு சமயம் பத்து பேர்கள் சேர்ந்து காசிக்குச் சென்று கொண்டிருந்தார்கள். வழியில் அவர் களை மூன்று திருடர்கள் கத்தியைக் காட்டி மிரட்டி, அவர்களிடமுள்ள வற்றை எல்லாம் கொடுக்கச் சொன்னார்கள்.

அப்போது பயணிகளில் ஒருவன் ''மூன்று மூன்றுகள் ஒன்பது. மிகுந்தி ருப்பது ஒன்று'' என்று கூவினான்.

உடனே அவர்கள் மூன்று மூன்று பேர்களாகப் பிரிந்து திருடர்களைத் தாக்கிப் பிடித்தனர். பத்தாவது பயணி காட்டுக் கொடிகளைக் கொண்டு வந்து அம்மூன்று திருடர்களின் கை களிலிருந்து கத்திகளைப் பிடுங்கி, கை கால்களைக் கட்டியும் போட் டான். அவர்கள் பயத்தை விட்டு ஒன்று பட்டுச் செயல்பட்டதால், தம் உயிரை யும் உடைமைகளையும் காத்துக் கொள்ள முடிந்தது. இது போல மக்கள் பயமின்றி ஒன்றுபட்டு செயல் பட்டால் சுகமாகவும் வாழலாம்'' என்றார்.

சீடனும் ''ஆம். இது தான் சரியான வழி'' என்று கூறி குருவுடன் வழி நடந்தான்.





# தப்ப முடியவில்லை

ஒரு ஊரில் மங்கம்மா என்பவள் தன் கணவன் மணவாளனுடன் வாழ்ந்து வந்தாள். அவர்களுக்கு இருந்தது ஒரு சிறு ஓட்டுவில்லை வீடும் கொஞ்ச நிலமும் தான். மணவாளன் ஒரு வேலையும் செய்யாமல் உட்கார்ந்திருப்பான். குடும்ப பாரம் முழுவதும் மங்கம்மாவின் தலையில் விழுந்தது. எப்படியோ வேலை செய்து அவள் சிக்கனமாகக் குடித்தனம் செய்து வந்தாள்.

அந்த ஊரில் அந்த ஆண்டு தேர்த் திருவிழா நடக்க இரண்டு வாரங்களே இருந்தன. அப்போது மணவாளன்தன் மனைவியிடம் ''நம்மூர் தேர்த் திருவிழா வரப் போகிறது. அதைக் காண நம் உறவினர்கள் வெளியூர்களிருந்து நம் வீட்டிற்கு வருவார்கள். அப்போது வீடு சுத்தமாக இருக்க வேண்டாமா? அதனால் வீட்டை வெள்ளை அடிக்க ஆட்களைக் கூட்டி வருகிறேன்'' என்றான். மங்கம் மாவோ ''ஆட்கள் யாரும் வேண்டாம். குத்துக்கல் போல நாம் இருக்கிறோமே நான் சுண்ணாம்பைக் கரைத்துக் கொடுக்கிறேன். நீங்கள் சுவர்களில் வெள்ளை அடியுங்கள். இதனால் ஆட்களுக்குக் கொடுக்கும் கூலியை மிச்சப் படுத்தலாம்'' என்றாள்.

அதைக் கேட்ட மணவாளன் திருவிழா பற்றிய பேச்சைத்தான் எடுத்தது பெரும் தவறு என எண்ணி உடனே வீட்டை விட்டு வெளியில் சென்றான். சற்று நேரத்தில் வேறொரு தெருவிலுள்ள தன் தங்கையின் வீட்டை அவன் அடைந்தான். அவனது தங்கை தருமு சற்ற கருப்பு. அதனால் சற்று வசதியாக உள்ள அவளது மாமியார் அவளை மட்டம் தட்டிப் பேசியே வந்தாள். அதனால் மாமியாருக்கும் மருமகளுக்கும் இடையே சண்டை மூள, தருமு அவ்வப்போது தன் அண்ணன் மணவாளன் வீட்டிற்குப் போய் விடுவாள். ஓரிரண்டு நாட்களுக்குப் பின் அவளது கணவன் வந்து அவளைச் சமாதானப்படுத்தித் தன்

**-எஸ். சோபினி-**



வீட்டிற்கு அழைத்துச் செல்வான். இது வழக்கமாக நடப்பதாகும்.

மணவாளன் தன் தங்கையிடம் ''நீ தேர்த்திருவிழா ஆரம்பமாவதற்கு நாலைந்து நாட்களுக்கு முன்பே அங்கே வந்து விட வேண்டுமென்று மங்கம்மா சொல்லச் சொன்னாள். அதனால் உன்னை அழைத்துப் போக வந்தேன். இப்போதே கிளம்பு'' என்றான். தருமுவும் தன் மாமியாரிடம் சொல்லி விட்டுத் தன் அண்ணனுடன் கிளம்பி விட்டாள். கொஞ்ச தூரம் போனதும் மணவாளன் தருமுவிடம் ''நீ நேராக வீட்டிற்குப் போ. கடையிலிருந்து சில சாமான்களை நான் வாங்கிக் கொண்டு வந்து சேர்கிறேன்'' என்று கூறி அவளை அனுப்பினான்.

தன் தங்கை வீட்டிற்கு வந்திருக்கும் போது தன் மனைவி வீட்டில் வெள்ளையடிக்கச் சொல்ல மாட்டாள் என்று எண்ணியே மணவாளன் தருமுவை தன் வீட்டிற்கு அனுப்பினான். வெள்ளை அடிக்க ஆட்களை அமர்த்த மங்கம்மா சம்மதிப்பாள் என்றும் அவன் எண்ணினான். இதற்குள் மங்கம்மா வீட்டில் சுண்ணாம்பு அடிக்க பக்கத்து வீட்டிலிருந்த ஏணியை வாங்கி வைத்தாள். வெளியில் சென்ற மணவாளன் திரும்பி வராததைக் கண்டு அவள் தானே வெள்ளையடிக்கும் வேலையைத் தொடங்கினாள்.

சற்று நேரத்திற்குப் பின் தன் அண்ணன் வீட்டை அடைந்த தருமு மங்கம்மாவிடம் ''நீங்கள் அண்ணனிடம் சொல்லி அனுப்பியபடியே

திருவிழாவிற்கு ஐந்து நாட்களுக்கு முன்பே இங்கே வந்து விட்டேன். அண்ணன் கடையிலிருந்து சாமான்களை வாங்கிக் கொண்டு சற்று நேரத்தில் வந்து விடுவதாகச் சொல்லி விட்டு என்னை முதலில் போகச் சொன்னான்'' என்றாள்.

தருமு சொன்னதைக் கேட்டதும் மங்கம்மா மணவாளன் செய்துள்ள தந்திரத்தைப் புரிந்து கொண்டாள். தன் கணவன் மீது அளவில்லாத கோபம் வந்தாலும் அவள் அதை அடக்கிக் கொண்டு சிரித்தவாறே ''நல்ல சமயத்தில் வந்தாய். வீட்டிற்கு வெள்ளை அடித்துக் கொண்டிருக்கிறேன். உனக்கும் வெள்ளை அடித்து விடுகிறேன். உன் கருப்பு நிறமும் மறைந்து விடும். உன் மாமியாரும் உன்னைக் கண்டு மகிழ்ந்து போவாள்'' என்றாள்.

அதைக் கேட்ட தருமு கோபம் கொண்டு தன் வீட்டிற்கு விர்ரென்று போய் விட்டாள். மங்கம்மா அது பற்றிக் கவலைப்படாமல் தன் வேலையில் ஈடுபட்டாள்.

வழியில் வேகமாக தருமு தன் கணவன் வீட்டிற்குப் போய்க் கொண்டிருந்ததைப் பார்த்த மணவாளன் தன் வீட்டிற்கு வந்து மங்கம்மாவிடம் ''தருமு கோபமாகத் தன் வீட்டிற்கு ஏன் போய்க் கொண்டிருக்கிறாள்?'' என்று கேட்டான்.

மங்கம்மா கோபம் கொண்டவள் போல ''உங்கள் தங்கையின் போக்குத் தான் தெரியுமே. மாமியார் ஏதோ இரண்டு கடுஞ்சொற்கள் சொன்னாள் என்று இங்கே அடிக்கடி ஓடி வருவாள். பிறகு சுவரில் பட்ட பந்து போலத் திரும்பிப் போய் விடுவாள். அவளை சமாதானப்படுத்த பிறகு அவளது வீட்டிற்குப் போகலாம். இப்போது இங்கே வாருங்கள். மீதமுள்ள சுவர்களுக்கு சுண்ணாம்பு அடியுங்கள்'' என்றாள்.

தான் இனியும் அந்த வேலையைச் செய்யாமல் தப்பி விட முடியாது என்று கண்டு கொண்ட மணவாளன் மறு பேச்சுப் பேசாமல் வெள்ளை அடிக்க ஏணி மீது ஏறினான்!



# வீரதீர பராக்கிரமன் 11

ஓவியம் : பாணி




மக்கள் கூட்டத்தினிடையே ஆதித்தன் இருப்பதை சேனாதிபதி கவனித்தான்.

தன்னை யாரும் அடையாளம் கண்டு கொள்ளவில்லை என்று நினைக்கிறானோ?

யார் தந்தையே! ஆதித்தனா?

வேறு யாராம்? நானே போய் அவனை வரவேற்கிறேன்.












அவனுக்குப் பதில் எதுவும் கூறாமல் ஆதித்தன் மக்கள் பக்கம் திரும்பினான்.

மக்களே! மன்னர் நலமாகவே இருக்கிறார். ஓர் ஆபத்தைத் தவிர்க்க அவர் அரண்மனையிலிருந்து வெளியேற வேண்டியதாயிற்று. விரைவிலேயே அவர் வந்துவிடுவார். இவ்வளவு தான் இப்போதைக்குக் கூற முடியும். சற்றுப் பொறுமையாக இருங்கள்.






சில வீரர்கள் தன்னை நோக்கி வருவதை ஆதித்தன் கவனித்தான்.




ஆனால் நரேந்திரதேவன் குறுக்கிட்டுத் தடுக்கவே, ரவீந்திரதேவன் ஆச்சரியப்பட்டான்.






இந்த சம்பவங்களைப் பார்த்ததும் மக்களிடையே சலசலப்பு ஏற்பட்டது. அவர்கள் தமக்குள் ஏதேதோ பேசிக் கொண்டார்கள்.

நம் முதலமைச்சரையே அவர்கள் சிறையில் வைத்து விட்டார்களா?

ஆம் நண்பா! அந்தத் தந்தையும் மகனும் என்ன வேண்டு மானாலும் செய்வார்கள். அவ்வளவு சாமர்த் தியசாலிகள்!

வீரர்கள் மக்களைப் பின்னால் போகச் சொல்லி தள்ளினார்கள்.

நம் முதலமைச்சருக்கு எவ்விதத் தீங்கும் நேராது.

அரண்மனையை அடைந்ததும் சேனாதிபதி தன் நம்பிக்கைக்குப் பாத்திரமான படைத் தலைவர்களைக் கூட்டினான்.

முதலமைச்சா அங்கிருந்து எங்கும் போய்விடாமல் பார்த்துக் கொள்ளுங்கள். அவரைப் பார்க்க வருபவர்களைக் கண்காணியுங்கள்.

அப்படியே செய்கிறோம். அவர் மாளிகையிலிருந்து வெளியே எங்கும் போகாதபடி பார்த்துக் கொள்கிறோம்.

தன் அறை முழுவதும் தாறுமாறாகப் போடப் பட்டிருப்பதை ஆதித்தன் கண்டான். மிகவும் களைத்துப் போனதால் தூங்கலானான்.



அரண்மனையில் நரேந்திரதேவனும் ரவீந்திரதேவனும் ஒரு மந்திரவாதி கூறுவதைக் கவனமாகக் கேட்டார்கள்.
ஆகா! இப்போது மன்னர் நன்கு தெரிகிறார். அவருடன் வேறு இருவரும் இருக்கிறார்கள்.
ஓர் ஆணும் ஒரு பெண்ணும். அதோ! காடு தெரிகிறது. கொடிய மிருகங்கள் திரிகின்றன. அடேடே! ஒரு நீர்வீழ்ச்சி தெரிகிறதே! ஊஹூம். வேறெதுவும் தெரியவில்லை.






தந்தையும் மகனும் ஆறுதல் அடைந்தார்கள்.
பருந்தா? கருடனா?
இன்னமும் கொஞ்சம் நன்றாகப் பார். மேலும் கவன மாகப் பார்.
பார்த்துக் கொண்டே தான் இருக்கிறேனே. வேறெதும் தெரியவில்லை. உம்... அதோ ஒரு பருந்து... ஆம். அது ஆகாயத்தில் வட்டமிடுகிறதே
தொடரும்.




# போட்டோ வாக்கியப் போட்டி






**இந்த போட்டோக்களுக்கு ஒவ்வொரு சொல்லாலோ, அல்லது சிறு வாக்கியங்களாலோ தொடர்புடையதாக எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/–

போட்டி முடிவு மார்ச் 2002 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா,
எண்: 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி,
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

வாழ்த்துக்கள்

நவம்பர் 2001 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :

இராஜ. பிரியதர்ஷிணி
த/பெ. வீ. இராஜகோபால்
9, நாச்சியார்பாளையம்
உறையூர், திருச்சி - 620003

பரிசு பெற்ற வாக்கியங்கள்





பழமையை ரசிக்கும் மழலை
மறைந்திருந்து பார்க்கும் பதுமை

அம்புலிமாமா வருட சந்தா :

இந்தியாவில் ரூ.120/–

Payment in favour of CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

